உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

லர் 25 ] பராபவ ஆண்டு ஆனித்திங்கள் 10—7—66 [ இதழ்

தருமையாதீனக் குருமுதல்வர்

குருபூஜைவிழாவில்



25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் பட்டணப்பிரவேசமாக

எழுந்தருளல்




உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25 || 10–7–66 || இதழ் 8

## உட்பொருள்





உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்

### அருள்வாக்கு

நெருப்பென்ருல் வாய்சுடுமோ
நெய்பால்தேன் கட்டி
கருப்பென்ருல் தித்தியா
காணி—விருப்பமுடன்
நீபிரமம் என்றக்கால்
நீபிரமம் ஆயினையோ
நீபிரமம் சற்குருவால்
நில். (42)

ஆசிரியர் :-

வித்துவான்,

சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-

வித்துவான்,

சி. அருணைவடிவேல் முதலியார்.

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25 ] பராபவ - ஆனி - 10—7—66 [ இதழ் 8

*திருச்சிற்றம்பலம்*

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. (சம்பந்தர்)

*திருச்சிற்றம்பலம்*



## சீகண்ட முதல்வர்

எண்ணற்ற உயிர்களுக்கு, எண்ணற்ற வகையில் எல்லா உலகங்களிலும் எழுந்தருளியிருந்து அருள்புரிகின்ற இறைவன், இம்மண்ணுலகில் திருக்கயிலாய மலையில் சீகண்ட மூர்த்தியாய் எழுந்தருளியிருந்து அருள்புரிகின்றான் என்பது, அருளாளர் கண்ட உண்மை. அப்பெருமானுக்கு நாற்றோள், முக்கண், மான், மழு, நீலகண்டம் முதலிய அடையாளங்கள் பல இருப்பினும், நீலகண்டம் ஒன்றையே சிறப்பாக எடுத்து அதனை, 'சீகண்டம் (திருநீலகண்டம்)' எனப் போற்றியுரைத்தற்குக் காரணம், அஃது ஒன்றே அவனது இறைமைக் குணங்கள் பலவற்றை விளக்கிநிற்றல் பற்றியாம்.

தேவர்கள் நிலை என்ருகியிருக்கும்' என்னும் கருத்தினைப் பலவகை நயங்களுடன் புகழ்ந்து கூறும் பாடல்கள் எண்ணில் அடங்கா.

இத்துணைப் புகழ்ச்சிக்கும் உரியதாய் நிற்கும் சிவ பெருமானது நீலகண்டம், எவ்வெவற்றை நமக்கு நினைப்பிக் கின்றது? மேற்கூறியவாறு அவனது பேரருளை முதற்கண் நினைப்பிக்கின்றது. தலைவராய் இருப்பவர்க்கு முதற்கண் வேண்டப்படுவது அருள் - இரக்கம். அதனை மிகவுடைமை யாகிய 'பேரருளுடைமை' என்னும் இறைமைக் குணத் தையே நீலகண்டம் முதன்மையாக விளக்கிநிற்கின்றது.

இனி, அருள் இருப்பினும் அதன்வழியே செய்துமுடிக் கும் ஆற்றலும் தலைவராயினுர்க்கு வேண்டும். அஃது எங்கும் பரந்த 'ஆலகாலம்' என்னும் பெருநஞ்சினை ஒரு சிற்றளவினதாகும்படி அடக்கினமையாலும், அந் நஞ்சினை வயிற்றினுட் செல்லாது கண்டத்திலே நிறுத் தினமையாலும் தெரிதலின், நீலகண்டம் அவனது, 'முடிவி லாற்றல்' என்னும் குணத்தையும் விளக்குவதாம்.

நஞ்சின் வேகத்திஞல் பலரும் உடல் கருகியும், மயங் கியும், இறந்தும் போக, சிவபிரான் அதனை உட்கொண்டும் யாதொரு மாறுபாடுமின்றி யிருத்தலால், அவனது, தன் வயத்தனுதலாகிய இறைமைக் குணம் வெளியாகின்றது. நஞ்சினது தன்மையால் சிவபிரானது கண்டம் கறுத்துவிட்ட தன்ருே என்று வினவலாம். அதற்குக் காரைக்காலம்மை யார் ஒருவிடை கூறுகின்ருர். சிவபிரானை நோக்கி வினவும் ஒரு வினுவில் அவர், 'ஞானியர் உள்ளத்திலே வீற்றிருக் கின்ற பெருமானே, உனது கண்டம் நஞ்சினுல் கறுப்பாகி யது என்ருல், அதனை உண்டவாயும் கறுத்திருத்தல் வேண்டுமன்ருே! அது கறுத்தல் இன்றி முன்போலவே இருக்க, கண்டம் மட்டும் கறுத்தது எப்படி?' என்று வினவு கிருர்:

ஒளிவிலி வன்மதனை ஒண்பொடியா நோக்கித்
தெளிவுள்ள சிந்தையினிற் சேர்வாய் — ஒளிநஞ்சம்
உண்டவாய் அஃதிருப்ப உன்னுடைய கண்டம்இருள்
கொண்டவா றென்இதனைக் கூறு.

எனவே, கண்டம் கறுக்கவில்லை; கண்டத்தினது படிகம் போலும் தூய்மையாலும், மென்மையாலும் உள்நிற்கின்ற நஞ்சினது கறுப்பே வெளித்தோன்றுகின்றது என்றதாம்.

சிவபெருமான் நஞ்சுண்ட வரலாறு, மற்றுமோர் உயரிய கருத்தைப் புலப்படுத்துவது, சிவபெருமானை நினைப்பதே அறம்; அவனை நினையாமையே பாவம்.

"பரன்டிக் கன்பி லார்செய் புண்ணியம் பாவ மாகும்"

என்பது சிவஞான சித்தி. ஆகவே, அவனை நினையாது செய்யும் செயல்களெல்லாம் வினையாய் முடியும். ஆயினும் பின்பு அவனை நினைத்து முறையிடின், அவ்வினையை அவன் நீக்கியருளுவான். இவ்வுண்மையையே, நஞ்சுண்ட வரலாறு நன்குணர்த்துகின்றது.

தேவர்கள் சிவபெருமானை நினையாது செய்த செயல் வினையாய் முடிந்து, நஞ்சினைத் தோற்றுவித்தது. பின்பு அவர்கள் அப்பெருமானை நினைந்து சென்று வணங்கியபின் அவ்வினை நீங்கிப்போக, அவனது அருளால் அமிர்தம் கிடைத்தது. ஆகவே, சிவபெருமானது திருநீலகண்டம், தன்னை நினைவார்க்கு வினையைப் போக்கும் என்பது தெளிவாகும். இதுபற்றியே ஞானசம்பந்தர், அடியார்களது வினை நீங்கப் பாடியருளிய, "அவ்வினைக் கிவ்வினையாம்" என்னும் திருப்பதிகத்தினைத் திருநீலகண்டத் திருப்பதிகமாகவே அருளிச்செய்தார். இதனைச் சேக்கிழார்,

"எவ்விடத் தும்அடி யார்இடர் காப்பது
கண்டம் என்றே
செய்வினை தீண்டா திருநீல கண்டம்
எனச் செப்பினர்"

என்று குறிப்பிடுகின்றார்.

உலகத் துன்பத்திற்கும், மற்றும் பிறவித்துன்பத் திற்கும் காரணம் வினையே. அதனைப் போக்குவது சிவபெருமானது நஞ்சுண்ட கண்டமாதலின், அதனை, 'சீகண்டம்'

என்றும், 'திருநீலகண்டம்' என்றும், 'மணிகண்டம்' என்றும் பலவாறு போற்றி யுரைக்கின்றனர் பெரியோர். திருநீல கண்டம் பாவத்தைப் போக்கி உலக இன்பத்தையும், இரு வினையையும் போக்கிவீட்டின்பத்தையும்தருவதாயின், அதனை யுடைய மூர்த்தி, 'போகம், மோட்சம்' என்னும் இரண்டினை யும் தரும் முதல்வனாதல் இனிது விளங்குகின்றதன்றோ அங்ஙன மாதலின் பிரகிருதி புவனமாகிய இவ்வுலகத்தில் தேவர் முதல் யாவர்க்கும் இருவகைப் பயனையும் தருதற் பொருட்டுச் சிவபெருமான் திருக்கையிலையில் சீகண்ட முதல்வனாய் விளங்குகின்றான்.

சீகண்ட முதல்வனாகிய சிவபெருமானைக் குறிக்கும் 'ஓம் நீலகண்டாயநம;' என்னும் மந்திரம் அவனது நாமங்கள் பலவற்றுள்ளும் சிறப்புடையதாய், 'சிவ அட்டாட்சரம்' எனப் போற்றப்படுகின்றது. அம்மந்திரம் பிறப்பை அறுப்பது என்பதை,

> *"நவில் ஓம் நீல கண்டாய*
> *நமஎன் றியம்பும் எட்டெழுத்தும்*
> *நுவல்வார் மீல மயக்கூட்டின்*
> *நுழையா வாறு பெற"*

என்னும் காஞ்சிப் புராணத்தால் அறியலாம்.

சீகண்ட முதல்வன் போகம், மோட்சம் இரண்டையுந் தருபவனாதலின் திரிபுரதகனனாய் நின்று திரிபுரத்து அசுரர் களை அழித்துத் தேவர்களை வாழ்வித்தமை முதலியவற்றை செய்தும், தென்முகக் கடவுளாய் இருந்து நந்திபெருமான் வாயிலாக உலகத்தில் ஞானத்தைப் பரப்பியும் விளங்கு கின்றான். அம்முதல்வனது வழிவந்த ஞானபாரம்பரைகளே இன்று தமிழகத்தில் திருக்கயிலாய பரம்பரைகளாய் விளங்கு கின்றன. எனவே, இருமை இன்பமும் வேண்டுவார் சீகண்ட முதல்வனை மறவாது நினைந்து வழிபடுதல் இன்றியமை யாததாம்.

---

உ

குருபாதம்

திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய
சுவாமிகள் வழங்கியருளிய

# அருளுரை

---

## உயிர்க்கு உறுதி

நீரிலே மூழ்கிலுமென்; நித்தம்அருச் சிக்கிலுமென்;
பாரிலே சுற்றிப் பணியிலுமென்; — வேரிலே
உற்றிருந்தா லன்றோ உயிர்க்குறுதி! ஒன்றிரண்டும்
அற்றவனே சொக்கநா தா.

—குருஞானசம்பந்தர்.

உலகில் உள்ள உயிர்கள் யாவும் உடலுக்கு உறுதியையே தேடுகின்றன; உயிருக்கு உறுதியைத் தேடுதல் பெரும்பாலும் இல்லை. ஆனால், உடலோ நிலைத்ததன்று; உயிரும் உடலும் ஒன்று சேர்ந்திருப்பது எவ்வளவு காலத்திற்கு? அதனை அறுதி யிட்டுக் கூற இயலாது. ஒவ்வொரு வகையான உயிருக்கு ஒவ்வோர் அளவுக்காலத்தைப் பொதுவாகக் கூறுவது உண்டு. அவ்வகையில், மக்களாய்ப் பிறந்த உயிர் மக்களுடம்போடு கூடி வாழுங்காலம் நூறு ஆண்டு என்பது மரபு. ஆயினும், மக்கள் உடம்பை எடுத்த உயிர்களுள் ஒவ்வொன்றும் அங்ஙனமே நூறாண்டுகள் அவ்வுடம்போடு கூடி வாழும் என்பதில்லை. அதற்கிடையில் எப்பொழுதும் அவ்வுயிருக்கு அவ்வுடம் போடுள்ள தொடர்பு அற்றுவிடுதல் கூடும்.

"கருவினுள் அழிவ தாயும்
கழிந்திடா தழிவ தாயும்
பரிணமித் தழிவ தாயும்
பாலனாய் அழிவ தாயும்

தருணாய் அழிவ தாயும்
தான்நரைத் தழிவ தாயும்
உருவமே அழிவே யானல்
உள்ளபோ தேபார் உய்ய "

என்பது சிவஞானசித்தி. இவ்வாறு எப்பொழுது நீங்கும் என்று அறுதியிட்டுக் கூறமுடியாதபடி எந்த நேரத்திலும் நீங்கக் கூடியதாய் நிலையற்ற உடலுக்கு உறுதி தேடுவதில் உயிர்களுக்கு உண்டாகின்ற ஊக்கம் எவ்வளவு! அவ்வூக்கங் காரணமாக உள்ளத்திலே எழுகின்ற எண்ணங்கள் எவ்வளவு! அவ்வெண்ணங்கள் காரணமாக ஒரு கணமும் நிற்பது என்பது இல்லாமல் அலைகின்ற அலைவு எவ்வளவு! அவைகளுக்கு ஓர் எல்லையுண்டோ!

" ஒருபொழுதும் வாழ்வ தறியார்; கருதுப
கோடியும் அல்ல பல "

என்று, அவைகளை அளக்கப்புகுந்த திருவள்ளுவர் அளவிட முடியாமல் விட்டுவிட்டார்.

இவ்வாறு அளவற்ற எண்ணங்களை எண்ணுவதும், கடல் அலையில் அகப்பட்ட துரும்புபோலவும், காற்றில் அகப்பட்ட பஞ்சுபோலவும் அலைவதும் எல்லாம் எதற்கு? வயிறார உண்பதற்கும், நன்கு உடுத்து வாழ்வதற்குமே யன்றி வேறில்லை. அவ்வாறு உண்பதற்குத் தேவைப்படுவது எவ்வளவு! மிகச் சிறிய அளவேயாம்.

" உண்பது நாழி; உடுப்பது நான்குமுழம்
எண்பது கோடிநினைந் தெண்ணுவன "

என்பது ஔவையார் வாக்கு.

" தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி உடுப்பவை இரண்டே "

என்பது நக்கீரனார் பொன்மொழி. ஆகவே, இந்தச் சிறிய அளவிற்காக எந்நேரமும் ஓய்வின்றி உழைத்தல் வேண்டுவதில்லை. நாழி அரிசியையும், நான்குமுழ உடையையும் தேடுவ

நிலேயே காலம் முழுதும் கழிந்துவிடுமாயின், மற்றொன்றைச் செய்தற்குக் காலம் எவ்வாறு கிடைக்கும்? கிடைத்தல் அரிதேயாம். மக்கள் தங்கள் காலத்தை இவ்வாறு உடற்குறுதி தேடுவதிலேயே கழித்துவிடுவதைக் கண்டு அப்பர்,

" பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாமம் நவில்கிலார்
ஆக்கைக் கேஇரை தேடி அலமந்து
காக்கைக் கேஇரை யாகிக் கழிவரே "

என இரங்கி அருளிச்செய்தார். இதனல் உடற்கு உறுதி தேட வேண்டுவதில்லை என்பது பொருளாகாது. உடற்கு உறுதி தேடுவதிலேயே காலம் முழுவதையும் கழித்துவிடாமல், உயிர்க்கு உறுதியையும் தேடிக்கொள்ளவேண்டும் என்பதுதான் கருத்து. ஏனெனில், நமக்குக் கிடைத்துள்ள இம்மக்கட் பிறப்பு மிகவும் அருமையானது. ஆயினும், இது நிலையற்றதாய் இருத்தலின், இஃது உள்ளபொழுதே உயிர்க்கு உறுதியைத் தேடிக்கொள்ளுதல் வேண்டும்.

" இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ !
யாதுவருமோ ! அறிகிலேன் "

என்ருர் தாயுமானவர்.

" வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி
மதித்திடுமின் "

என்று அறிவுறுத்தியருள்கின்ருர் அப்பர்பெருமான். 'காற்று உள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும்' என்னும் பழமொழியை வைத்து நம் ஆதீன அடியவர்களுள் ஒருவராகிய படிக்காசு தம்பிரான் என்பவர் இக்கருத்தை விளக்கும் முறை மிகவும் அழகானது;

நேற்றுள்ளார் இன்றிருக்கை நிச்சயமோ ஆதலினுல்
நினைந்த போதே
ஊற்றுள்ள பொருள்உதவி அறந்தேடி வைப்பதுஅறி
வுடைமை யன்ருே

கூற்றுள்ளம் அலையவரும் தண்டலையா ரேசொன்னேன்
குடபால் வீசும்
காற்றுள்ள போதுளவரும் தூற்றிக்கொள் வதுநல்ல
கருமந் தானே.

" அன்றறிவாம் என்னுது அறம்செய்க "

என்கின்றது பொதுமறை. ஆகவே, வாழ்க்கையில் உடற்கு உறுதி தேடுவதிலேயே காலத்தை எல்லாம் கழித்துவிடாது, உயிர்க்கு உறுதியையும் தேடிக்கொள்ளுதல் வேண்டும்.

உறுதி - நன்மை. உயிர்க்கு உறுதி - உயிருக்கு நன்மை. 'உயிருக்கு நன்மையாவது எது?' என்று வினவும்பொழுது, 'அறம்' என்பதே, ஆன்றோர் அனைவரும் கூறும் விடை. ஆயினும், அதற்குமேல், 'அறமாவது எது'? என்று வினவும் பொழுது, பலர் பலவகையாக விடை கூறுகின்றனர்.

'மக்களில் எளியவரை வலியவர் வருத்தாதிருத்தலே அறம்' - 'எளியவரை வலியவர் வருத்தாதிருந்தால் மட்டும் போதாது; அவர்களுக்குத் தங்களால் இயன்ற உதவிகள் அனைத்தையும் செய்வதே அறம்' - 'எளியவர்களாகிய மக்களுக்கு இரங்குதல்மட்டும் போதாது; மக்களினும் தாழ்ந்த எளிய சிற்றுயிர்களுக்கும் இரங்குதல் வேண்டும்; ஆகவே, கொல்லாமை. புலால் உண்ணாமை முதலியவைகளை உடையவர்களே அற வோர்' - 'இவ்வாறு உயிர்களுக்கு இரங்குதல்மட்டும் போதாது; தெய்வங்களை இகழாது வழிபடுதலே அறம்' - 'தெய்வங்களை வழிபடுதல் மட்டும் போதாது உயிர்கட்கெல்லாம் தலைவனாகிய முழுமுதற் கடவுளை உணர்ந்து வழிபடுவதே அறம்' என்று இவ்வாறு, அறத்தைப்பற்றிப் பலவகையான விடைகள் கூறப் படுகின்றன. இவைகளை நன்கு நோக்கின், முன் சொல்லிய கருத்துக்களைப் பின்சொல்லிய கருத்துடையோர் மறுக்கவில்லை என்பது புலனாகும். ஆனால் முன்சொல்லிய கருத்துக்களை யுடையவர் பின்சொல்லும் கருத்துக்களை இகழாவிடினும், அவைகளை இன்றியமையாதனவாகக் கொண்டு போற்றுதல் இல்லை, எனினும், முன்முன் சொல்லிய கருத்துக்களைவிடப் பின் பின் சொல்லுங் கருத்துக்கள் உயர்வுடையன. ஆகவே, இங்குக் கூறிய அறங்கள் அனைத்தையும் ஓர் மரமாகக் கற்பனை செய்து பார்த்தால், அறம் என்ற ஒரு மரத்திற்கு மற்றவை எல்லாம்

தழை, வளார், கிளை முதலியனவாய் அமைய, எல்லாவுயிர்கட்கும் தலைவனாகிய முழுமுதற் கடவுளை அறிந்து வழிபட்டு அவன்வழி நிற்றல் என்கின்ற ஒன்றே அதன் வேராய் நிற்கும். ஏனெனில், அவனது திருவருள் ஒன்றே ஏனைய எல்லாவற்றிற்கும் அடிநிலை. ஆகவே, அம்முதல்வனது திருவருளை நோக்காமல், பிறவற்றை நோக்குதல் ஒரு கட்டிடத்தின் அடிப்படையைப் பாதுகாவாமல், மேல்தளத்தைப் பாதுகாக்க நினைப்பதுபோலாகும். இது பற்றியே,

> "காண்பவன் சிவனே யானால்,
> அவனடிக் கன்பு செய்கை
> மாண்பறம் ; அரன்றன் பாதம்
> மறந்துசெய் வினைக ளெல்லாம்
> வீண்செயல் "

என்று அருளிச்செய்தார், அருணந்தி சிவாசாரியார். 'வீண் செயல்' என்பதற்கு, 'சிறந்த பயனைத் தருவன அல்ல' என்பதே கருத்து. எனவே, இறைவனை நினையாது செய்யும் செயல்கள் நற்செயலாய் இருப்பினும், அவை உயிருக்குச் சிறந்த நன்மையைத் தரமாட்டா என்றதாயிற்று.

உயிருக்குச் சிறந்த நன்மையாவது வீடுபேறு ஒன்றே. அஃதாவது பிறப்பிறப்புக்கள் அற்ற பேரின்பநிலை. உயிர்கள் அடையும் துன்பங்களில் பிறப்பிறப்புக்களைவிடப் பெரிய துன்பம் இல்லை. அவை அடையும் இன்பங்களில் வீடுபேற்றை விடப் பெரிய இன்பம் இல்லை. ஆகவே, பெருந்துன்பமாகிய அவற்றைப் போக்கிப் பேரின்பமாகிய அதனைத் தருவது எதுவோ அதுவே உயிர்களுக்கு உண்மையில் உறுதியைத் தருவதாகும். அங்ஙனம் நோக்கினால், திருவருள் உணர்வு அல்லது திருவடி ஞானம் ஒன்றைத்தவிர பிற யாவும் அவ்வுறுதியைத்தர மாட்டா. அவை, உலகத்தில் செல்வத்தைத்தரும்; கல்வியைத் தரும், அதிகாரத்தைத்தரும்; நல்ல வாழ்வைத்தரும்; ஆயுளைத் தரும்; ஆனால், அடிப்படைத் துன்பமாகிய பிறவியைப்போக்கிப் பேரின்பமாகிய வீட்டினைத் தரமாட்டா. அதனால், உயிர்க்கு உண்மையாக உறுதியை நாடுவோர், இறைவனது திருவடி ஞானத்தைப் பெறுதல்வேண்டும். அந்த ஒன்றைவிடாது, மற்றவைகளை எல்லாம் செய்வதால், உயிர்க்கு உறுதி உண்டாகாது. இதனை எங்கள் ஆதிபரமாசாரியர் எடுத்து அருளிச் செய்த திருவெண்பாவே முதலில் கொடுக்கப்பட்டது.

அதில் அவர்கள் முதற்கண், "நீரிலே மூழ்கினும் என்" என்று அருளுகின்றார்கள். அஃதாவது, 'இறைவனது திருவடி ஞானம் இல்லாமல், கங்கை முதலிய தீர்த்தங்களுக்குச் சென்று மூழ்கினால்தான் என்ன பயன்!' என்கின்றார்கள். சிலர் 'இறைவனை நினைத்தாலும் நினையாவிட்டாலும், இதுபோன்ற நற்செயல்களைச் செய்தால், அதுவே போதும்' என்று கூறுவர். அங்ஙனம் கூறுவோர் உடற்பயனைப் பெறுவார்களேயல்லது, உயிர்ப்பயனைப் பெறமாட்டார்கள் என்பதே உயர்ந்தோர் துணிபு. அதனையே எங்கள் பரமாசாரிய மூர்த்திகளும் அருளினார்கள்.

> "கங்கை ஆடில்என்! காவிரி ஆடில்என்!
> கொங்கு தண்குமரித்துறை ஆடில்என்!
> ஓங்கு மாகடல் ஓதநீ ராடில்என்
> எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே"

என்று, சமயாசாரிய மூர்த்திகளாகிய நாவுக்கரசர் பெருமானும் அருளிச்செய்தாரன்றோ! இங்ஙனம் அருளிச்செய்தது, ஞானம் இன்றி இவைகளைச் செய்யின், அங்கும் உலகப்பயனை நோக்கிச் செய்தல் கூடுமேயன்றி, அதனை வேண்டாது விடுத்துச்செய்தல் இயலாது என்பது பற்றியேயாம்.

அடுத்து, 'நித்தம் அருச்சிக்கிலும்என்' என்றார்கள். அருச்சித்தல் - பூசைசெய்தல். இங்கு, 'அருச்சிக்கிலும் என்' என்றது, 'உள்ளத்தில் பற்றில்லாமல், வெளியில் நாள்தோறும் பூசைசெய்து என்' என்றதாம். அன்பில்லாது செய்யும் பூசையை ஆண்டவன் ஏற்றுக்கொள்ளுதல் இல்லை.

> "உள்ளம் உள்கலந்து ஏத்தவல் லார்க்கலால்
> கள்ளம் உள்ளவ ருக்கருள் வானலன்"

> "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
> புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
> பொக்கம் மிக்கவர் பூவும்நீ ருங்கொண்டு
> நக்கு நிற்பன் அவர்தம்மை நாணியே"

என்பன அப்பர் வாக்குக்கள். 'பாரிலே சுற்றிப் பணியினும் என்' என்று அடுத்து அருளிச்செய்ததும், 'தலங்களுக்கெல்லாம் யாத்திரையாகச் சென்று வணங்கினாலும், அன்பில்லாவிடில் என்ன பயன்' என்று அருளியதேயாம். ஞானம் இல்லாவிடில் மெய்ம்மையான அன்பு தோன்றாது. ஆகவே

இறைவனது திருவடி ஞானமே உயிர்க்கு உறுதி உண்டாதற்கு முதற்கண் வேண்டப்படுவதாகும். அதனையே, 'வேரிலே உற்றிருத்தல்' என்று அருளினார்கள். 'வேரிலே உற்றிருந்தாலன்றோ உயிர்க்குறுதி' என்று அவர்கள் வலியுறுத்தியருளுதலை, உயிர்க்குறுதி வேண்டுவோர் அனைவரும் உற்றுநோக்குதல் வேண்டும்.

வேரிலே - திருவடி ஞானத்திலே, உற்றிருந்தால் - உறுதியாகப் பொருந்தியிருந்தால் என்ன கிடைக்கும் என்பதை, 'ஒன்றிரண்டும் அற்றவனே சொக்கநாதா' என்று தங்கள் ஆன்மார்த்த மூர்த்தியின் பெருமை கூறும் முகத்தால் விளக்கியருளினார்கள். அஃதாவது ஒன்றென்றும், இரண்டென்றும் சொல்லவாராத சுத்தாத்வைத பரிபூரண முத்தி கிடைக்கும் என்றதைக் குறிப்பாக அருளியுள்ளார்கள். இறைவன் எல்லாப் பொருளிலும் ஒன்றுமின்றி இரண்டுமின்றி உடனாய்க் கலந்துள்ளான் அக்கலப்பினை உணராது அன்புறும் நிலைநீங்கி, அவ்வுணர்வைப்பெற்று, அவ்வுணர்ச்சி மேலிட்டால் உண்டாகும் இன்பவெள்ளத்தில் திளைத்திருக்கும்நிலை கூடும் என்றதாம்.

இதன்பின் தொடர்ந்துவரும் சில வெண்பாக்களில் அவர்கள், 'யான் என்னை மறந்து எல்லாம் உன்செயலே என்று உணரும் உனது திருவடி ஞானத்தை எனக்கு அளிப்பவனும் நீயே' என்றும் 'அந்த ஞானம் உறுதிபெற்று நிற்குமாயின், நீ என்னை எந்தப்பிறப்பில் பிறக்கச் செய்தாலும் தீமை இல்லை' என்றும் 'உயிர்களும் உன்னைவிட்டுத் தனியாய் இருப்பதில்லை; நீயும் உயிர்களை விட்டு நீங்குவதில்லை; ஆகையால், அவ்வாறு இருப்பதை உணராததே குறை' என்றும், 'இதை உணர்ந்த அன்பர்களுக்கன்றி, உணராத என்போல்வாருக்கு நீ அருள்புரிய மாட்டாயாயின், நீ எல்லாம்வல்ல சித்தனாயிருத்தல் எவ்வாறு' என்றும் அருளிச்செய்து, அவற்றின்பின், 'நரியைக் குதிரை ஆக்கினவனது தீர்த்தமாகிய வைகை நதியில் நாங்கள் மூழ்கி விட்டோம்; ஆதலால், நாங்களும் அவன் அடியார்களாகி, நாம் ஆர்க்கும் குடியல்லோம்; நமனை அஞ்சோம்; நரகத்தில் இடர்ப்படோம் என்ற நிலையை அடைந்துவிட்டோம்' என்று பாடிக் களிக்கின்றார்கள். இதுவே, உயிர்க்கு உறுதியான பெரும்பேறு, இப்பேற்றினைப் பெற, இத்தகைய அரிய அருள்வாக்குக்களை ஓதி உணர்வதே வழியாகும்.

# தமிழ்நாடு தெய்விகப் பேரவை

தமிழ்நாட்டிலுள்ள பல்வேறுபட்ட இந்து சமயச்சார்பான மடங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து சமயப்பிரசாரத்துக்கும் சமய மேம்பாட்டுக்கும் திட்டங்கள் வகுத்துச் செயல்புரிவதென முன்னமே முடிவு செய்திருப்பது பலரும் அறிந்தது.

அதனை ஒட்டி சங்க அமைப்பு விதிகளைப் பரிசீலித்து உறுதி செய்ய 12—6—66, 13—6—66 ஆகிய இரு நாட்களிலும் சென்னையில் பல மடாதிபதிகள் ஒன்றுகூடினர். சில மடத்திலிருந்து பிரதிநிதிகளும் கூட வந்திருந்தனர்.

12—6—66 மாலை 6 மணிக்குமேல் சென்னை மயிலை கபாலீஸ்வரர் ஆலயச் சார்பில் கட்டப்பெறும் கல்யாண மண்டபத்தில் கூட்டம் தொடங்கப்பெற்றது. முதல் கூட்டத்துக்குப் பிறகு நடைபெற்றவைகளைக் குறித்து இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையரவர்கள் விளக்கிச் சொன்னார்கள். சென்னை அரசாங்க முன்னாள் தலைமை செகரெட்டரி ஸ்ரீ வெங்கடேஸ்வரனவர்களும் உடனிருந்தார்கள்.

சங்க விதிகள் அமைப்புபற்றிப் பலரும் பல சிறந்த கருத்துக்களைத் தெரிவித்தார்கள். எல்லாவற்றையும் பரிசீலித்து ஏகமனதாக ஒரு முடிவுக்கு வந்தார்கள். இதற்குத் தமிழ்நாடு தெய்விகப் பேரவை என்று பெயரிடுவதென்றும் இச் சங்கத்தைப் பதிவு செய்து கொள்வதென்றும். இதன் நிர்வாகத்தில் மடங்களும் கோவில்களும் பங்குபற்றுவதென்றும், சென்னை மாநிலக் கோவில்களின் பிரதிநிதியாக அறநிலைய இலாகா ஆணையரவர்களை இப் பேரவைக் குழுவில் அலுவல் சார்புள்ள உறுப்பினராக ஏற்றுக் கொள்வதென்றும் முடிவாயிற்று. இப்பேரவைக்கு மடாதிபதி அங்கத்தினர்களில் ஒருவர் தலைவராக அமைவதாகவும் இலாகா ஆணையரவர்களை அலுவல் சார்புள்ள உபதலைவராக ஏற்றுக்கொள்வதென்றும் முடிவுசெய்யப்பட்டது. தலைவர் தேர்தல் செய்வதற்கு ஆண்டு முடிவுக்குமுன் பேரவை உறுப்பினர்கள் முன்னிலையில் சீட்டுக்குலுக்கி எடுத்து அதில் எடுக்கப்படும் பெயர்ச்சீட்டில் கண்ட மடாதிபதி அடுத்த ஆண்டுத் தலைவராக அமைவதென்றும் முடிவாயிற்று. நிர்வாகச் செலவுக்கு மடங்களின் வருவாயிலிருந்தும் ஆலயங்களின் வருவாயிலிருந்தும் நிதி அளிப்பதாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. சென்னையைத்

தலைமை இடமாக ஏற்று நிர்வாகம் நடத்துவதென்றும் ஆணையர் உபதலைவராக அவர்களுக்கு உதவியாகத் துணை ஆணையர் நிலையில் ஒருவரை அமைப்பதென்றும் ஒத்துக்கொள்ளப்பட்டது. நிர்வாகத்துக்கு ஏற்ற அலுவலர்களை நியமித்துக்கொள்வ தென்றும் முடிவுசெய்யப்பட்டது.

நிதி ஏற்பாடாக மடங்களின் வருவாயிலிருந்து 3 சத விகித மும் ஆலயங்களிலிருந்து 2 சதவிகிதமும் உதவித்தொகை அளிப்ப தென்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டது மாநில ஆலோசனைக்குழு, மாவட்ட, கிராம சங்கங்கள் அமைப்பதென்றும் மாநில ஆலோ சனைக் குழுவுக்கு ஆணையர் தலைவராகவும் மாவட்டக் குழுக் களுக்குத் துணை ஆணையர்கள் தலைவர்களாகவும் அமைக்க முடிவாயிற்று. பதிப்பாசிரியர் குழு ஒன்றும் அமைக்கப்பட்டிருக் கிறது.

தொண்டுகளில் சமயப் பிரசாரம், ஆலயங்கள் செம்மையுற பரிபாலிக்கப்படுதற்கு உதவிகள், சமூகத் தொண்டுகள் முதலிய வற்றை ஏற்று நடத்தலாமென்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக் கிறது.

மறுநாள் 13—6—66 அன்று காலை 10 மணிக்கு மீண்டும் அவை கூடியது. இந்த நேரத்தில் வெளி மாவட்டங்களில் இந்தப் பேரவையில் தொண்டாற்ற முன்வரக் கூடிய பல அன்பர்கள் அழைக்கப்பட்டிருந்தார்கள். தொடக்கத்தில் இந்தப் பேரவைத் தலைவர் தேர்தல்பற்றிப் பேச்சுவந்தது முதன்முதலில் தலைவர் தேர்தல் சீட்டுக் குலுக்கு முறையில் அமைவதைவிட ஏகமனதாகத் தேர்ந்தெடுத்து சுமுகமாக நல்லதொரு தொடக் கம் அமைதல் சிறப்பாகும் என எல்லோரும் கருதினார்கள் அதில் தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமே அவ்விதம் பதவி ஏற்கவேண்டுமென்றும் ஏகமனதாக முடிவா யிற்று. சபை அவ்விதமே கூடியதும் முதற் கடமையாகத் தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தைத் தமிழ்நாடு தெய்விகப் பேரவையின் முதல் தலைவராக ஏற்றுக் கொண்ட தாகத் தீர்மானம் நிறைவேறியது. குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் பேருவகையோடு மலர்மாலை அணிவித்துப் பாராட்டினார்கள்.

தலைமைப் பதவியை ஏற்ற தருமைக் குருமகாசந்நிதானம் அவர்கள் இப்பொழுது இருக்கும் கால நிலையை ஒட்டி இவ்விதம் ஒரு பேரவை அமைவது பொருந்தும். அதிலும் இலாகாவின் உறுதுணையோடு அமைதல் அதற்கு வலுவூட்டுவதாக இருக்கும்.

பேரவையின் நோக்கத்தை நிறைவேற்றுவதில் எல்லாம்வல்ல சொக்கேசன் துணைகொண்டும் தம் முன்னோர்களான குரு மூர்த்திகளின் அருள்கொண்டும் தம்மால் இயன்ற அளவு செய்ய முற்படுவதாகவும் அதற்கு மற்ற மடாதிபதி உறுப்பினர்களும், இலாகா அதிகாரிகளும் உடனின்று உதவி அளிப்பார்கள் என்று உறுதியாக நம்பி இதில் ஈடுபடுவதாகவும், இப் பெரும் பணி கால அளவில் பெருகி நம் நாட்டின் தலை சிறந்த ஸ்தாபன மாக நமது பேரவை விளங்கவேண்டுமென்று பெருமானைப் பிரார்த்திப்பதாகவும் அருளிச்செய்தார்கள்.

காஞ்சி காமகோடிபீடம் ஸ்ரீமத் சங்கராசாரியசுவாமிகள் முதலிய பல மடாதிபதிகளும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதா னத்தில் இப்பொழுது இப்பேரவையின் தலைமை ஏற்றது மிகவும் பொருத்தமானதென்றும் பேரவையின் பணிகள் வெற்றிபெற அவரவரும் உடனிருந்து ஒல்லும் வகையில் உழைப்பதற்கு முன் வருவதாகவும் பேசியருளினர். ஆணையரவர்கள் நன்றிகூற காலைக்கூட்டம் முடிவுற்றது.

மாலையில்: மயிலாப்பூர் P. S. உயர்நிலைப்பள்ளியின் விளை யாட்டு மைதானம் விழாக்கோலம் பூண்டிருந்தது. நல்ல அறிகுறியாக மக்கள் மனம்குளிர மாலையில் சிறிது மழை தூறி நின்றது. பெரியவிதான அமைப்பில் மேடை இட்டு பல்லாயிர மக்கள் வந்துகூட அணிகள் அமைக்கப்பட்டிருந்தன.

சென்னை மாநில முதலமைச்சர் கனம் திரு. பக்தவத்சலமவர் கள் தொடக்கவுரை பகன்றார்கள். நாட்டின் நற்காலமாக இப் பொழுது இந்த மாநில மடாதிபதிகள் தம்முள் ஒரு பேரவை அமைத்துத் திட்டமிட்ட நிலையில் ஒருசேரக்கூடித் தொண்டுகள் செய்ய முற்படுவது சாலச்சிறந்ததென்றும் அவர்கள் அருளாசி யாலேதான் நாட்டில் நிகழும் பஞ்சம் தீரவேண்டும் என்றும், நாட்டின் பல்வேறு திட்டங்கள் நிறைவேற வேண்டுமென்றும், பற்றுக்குறை நீங்கவேண்டுமென்றும் பேசிமுடித்தார்கள்.

தலைவர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தில் முன் காலத்திய நமது நாட்டின் முதலமைச்சர்களாக இருந்த பலரும் ஆஸ்திகம் தழைக்கத் தொண்டுகள் பல செய்ததைக் குறித்து எடுத்துச்சொல்லி அதேபோல இப்போது நமது மாநில முதலமைச்சரவர்களும் நல்ல பக்தியும் பண்பாடும் உடையவர் களாக அமைந்து இருப்பது நமக்கு நல்லதொரு வாய்ப்பாகும் என்றும் கடவுள் அருள் ஒன்றாலேயேதான் நம் குறை அகலும் என்றும் மக்கள் எல்லோரும் கடவுள் வழிபாட்டில் தீவிரமாக

[ தொடர்ச்சி 349-ம் பக்கம் பார்க்க ]

# அமுதிற்குத் தமிழென்று பேர்

வித்துவான். திருமதி. ப நீலா

கற்பனைப் பறவை சிறகசைத்துப் பறக்க இடம் தருவது நாட்டு வளம்தான், எந்தப் புராணத்தை எடுத்துக் கொண்டா லும் நாட்டு, நகர் வளமே முதற்கண் இருந்து அணி செய்யும்.

சங்கப் புலவர்பெருமக்கள்தாம் இவ்வழியை முதலில் போடத் தொடங்கினர் - பின்னர் அவர் வழி வந்த நற்றமிழ்ப் புலவர் களும் நாமும் அவ்வழியிலே பீடுநடை நடக்கத் தலைப்பட்டோம்.

வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு சிறப்பொடு பூசனை செல்லாது என்று சொன்னார் வள்ளுவப்பெருந்தகையார். பசும்புல் தலைகாணக் காரணமாயிருக்கும் விசும்பின் துளி அரு வியாய்ச் சொரிகிறது பழமுதிர் சோலையில். அருவியின் அழகை அது அள்ளிக் கொணர்ந்து உருட்டும் பொருள்களை அளவிட்டு உரைக்கும்போது - நாட்டின் இயற்கை அழகினை - வளத்தினை எடுத்துக் காட்டுகிறார் நக்கீரனார்.

" வேறுபல் துகிலின் நுடங்கி அகில் சுமந்து  
ஆரமுழு முதல் உருட்டி வேரற்  
பூவுடை அலங்கு சினை புலம்ப வேர்கீண்டு  
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த  
தண்கமழ் அலர்இறால் சிதைய நன்பல  
ஆசினி முதுசுளை கலாவ மீமிசை  
நாக நறுமலர் உதிர யூகமொடு  
மாமுக முசுக்கலை பனிப்ப பூநுதல்  
இரும்பிடி குளிர்ப்ப வீசி பெருங் களிற்று  
முத்துடை வான்கோடு தழீஇ தத்துற்று  
நன்பொன் மணிநிறம் கிளர பொன் கொழியா  
வாழை முழுமுதல் துமிய தாழை —  
இளநீர் விழுக்குலை உதிர தாக்கி  
கறிக்கொடிக் கருந்துணர் சாய பொறிப்புற  
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇ  
கோழி வயப் பெடை இரிய கேழலொடு  
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன  
குரூஉ மயிர் யாக்கைக் குடாவடி உளியம்

பெருங்கல் விடரளைச் செறிய கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்ப சேண்நின்று
இழுமென இழிதரும் அருவி ". யைப்

படம் பிடித்துக் காட்டும் பத்துப்பாட்டு.

நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

சிறிய முயற்சியால் பெரிய பயன்தரும் நாடே தலைசிறந்த நாடாகும். எங்கு நோக்கினும் தண்ணென்ற காட்சி. இனிய பொழில்கள் - நெடிய வயல்கள். கதிரொரு முழமே நீண்டு கட்டு முக்கலங்காணும் பெருமை உடையதல்லவா சோணாடு.

பச்சைப் பசேரென்ற வயலிடங்களைக் கண்ணுக்கினிய காலைப் போதிலோ; மனத்திற்கினிய மாலைப் போதிலோ காணும்போது எத்துணைக் கற்பனைகள் எழுகின்றன. மாலை வெயிலில் கதிர்கள் சாய்ந்தசையும் நிலைக்கு, அலைகளுக்கிடையில் தலைநிமிர்ந்தாடும் அழகு மங்கையும் ஈடாகமாட்டாளே!

**மூவர் தந்த முத்து :-**

" வான் பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத் தலைய கடற் காவிரி
புனல் பரந்து பொன் கொழிக்கும்
விளைவு அரு வியன் கழனி "

களைக் கண்ட முப்பெரும் புலவர்களாம் சிவஞான முனிவர் பரஞ்சோதி முனிவர், சேக்கிழார் பெருமான் ஆகியோர் அருளிச்செய்த அரும் பெறல் கற்பனை வளத்தினை இனிக் காணலாம்.

**சிந்தனைச் சிற்பி சிவஞான சுவாமிகள் :-**

உருத்திட்பம் உருக்காலை தலைநிமிறி உற்றதன் பின்
தருக்கற்று நனிவணங்கும் பழுத்த கதிர்த்தடஞ்சாலி
பெருக்கத்து வேண்டும் பணிவு மிகச் சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வெனும் மொழியைத் தோற்றும்

கதிர்த்த சாலிப் பயிர்கள் கருநன்கு உருதபோது தலை நிமிர்ந்தும், மணிகள் முற்றிய பின்னே தலைதாழ்ந்தும் நிற்கின்றன. அந்த நெற்பயிர்கள் ஒரு மாபெரும் உண்மையைச் சொல்லாமல் சொல்கின்றன.

வறுமை வந்துற்றபோது செம்மையும் - செல்வம் வந்து அடைந்தபோது பணிவும் வேண்டும் - என்ற மொழியைத் தெரிவிக்கின்றனவாம் சாலிப்பயிர்கள்.

" எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து ! என்பார் வள்ளுவர் "

செல்வத்திற்குப் பணிவுடைமை அணியாதல் போல வறுமைக்குச் செம்மையுள்ளம் அணியாக அமையும்.

'உயர்ந் தேந்து மருப்பின் கொல்களிறு பெறினும்
தவிர்ந்து விடுபரிசில் கொள்ளலென் உவந்து நீ
இன்புற விடுதியாயின் சிறிது
குன்றியுங் கொள்வல் கூர்வேல் குமண' (புறம் - 159)

'காணாது ஈத்தஇப் பொருட்கு யானோர்
வாணிகப் பரிசிலன் அல்லேன்' (புறம் - 208)

'இரவலர் புரவலை நீயும் அல்லை
புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர்
இரவலர் உண்மையுங் காண் இனி இரவலர்க்கு
ஈவோர் உண்மையுங் காண்' (புறம் - 152)

என்ற பெருமைமிகு பெருஞ்சித்திரனார் செய்தியும்'

'முற்றிய திருவின் மூவராயினும்
பெட்பின்று ஈதல் யாம் வேண்டலமே' (புறம் - 205)

என்று முழங்கும் பெருந்தலைச் சாத்தனார் வாக்கும், ஈயேன் என்ற இழிவைச் சுட்டிக்காட்டும் செம்மை உள்ளங்களின் உண்மை ஒளியாகும். 'வேண்டப் படுவது வறுமையில் செம்மை' என்று உணர்த்தும் புலவர் வாழ்க்கையைத்தான் நெற்கதிர்கள் பிரதிபலித்துக் காட்டுகின்றன.

இத்துணை கருத்துக்களையும் உள்ளடக்கியவைதான்

" பெருக்கத்து வேண்டும் பணிவு மிகச்சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வெனும் மொழியைத்தேற்றும் "

என்ற மாதவச் சிவஞான சுவாமிகள் அருளிய அருந்தமிழ். இனி பரஞ்சோதியார் - சேக்கிழார் பெருமான் இவர்களின் அமுதென்ற பாடல்களையும் நோக்குவாம்.

( விரியும் )

# "பண்டைத் தமிழர் மருத்துவம்"

திரு. T. V. சிவசண்முகம் B. A.,

மனிதன் என்று பிறந்தானே அன்று முதல் பிணியும் அவன் உடம்பிலுண்டு. பிணி இருந்ததால் அதனைப் போக்கும் முறையினைத் தெரிந்திருந்தான். ஆகவே மனித இனத்தின் தொன்மையே மருத்துவக்கலையின் தொன்மையுமாகும். மனிதன் தோன்றியதே தமிழகத்தில் தாமென உலக ஆராய்ச்சியாளர்கள் அனைவரும் ஒருமுகமாக ஏற்றுக்கொள்ளுகின்றனர். ஆகவே மனிதன் தோன்றியதும், அவனுக்குப் பிணி ஏற்பட்டதும். அப்பிணியைப் போக்கும் கலையினை முதன் முதலில் அறிந்ததும் தமிழகமே. ஆகவே மருத்துவக் கலைக்குத் தாயகம் தமிழகமே என்பதில் ஐயப்பாடில்லை.

பண்டைத் தமிழரின் மருத்துவமுறை சித்த வைத்தியம் எனப்படும். இது பெரும்பாலும் மூலிகைகளைக்கொண்டே செய்யப்பட்டது. அறுவைச் சிகிச்சையும் (Operrtion), இதனுள் சித்த மருத்துவத்தைப்போன்ற சிறந்ததொரு மருத்துவமுறை அன்று தொடங்கி இன்றுவரை எழுந்ததில்லையெனில் அது மிகையாகாது.

**சித்த மருத்துவத்தின் சிறப்பு :**

கழிந்த இளமையினை மீளப் பெறவும், மாண்டவரை உயிர்ப்பிக்கவும், இன்று மருத்துவக் கலையில் சிறந்தோரெனக்கூறும் ஆங்கில மருத்துவர்கள் அறிந்தாரில்லை. ஆயின் இவற்றைப் பண்டைக் காலத்தே சித்த வைத்தியர்கள் நன்கறிந்த இளமையினைத் திரும்பப்பெற பச்சிலை மூலிகைகளையும் பயன்படுத்தி வெற்றிகண்ட செய்தியினைப் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பரக்கக் காணலாம்.

மூலிகைகளைக்கொண்டு இரும்புபோன்ற தாழ்ந்த உலோகங்களையும், பொன் போன்ற உயர்ந்த உலோகங்களாக்கும் கலையையும் அறிந்திருந்தனர். நஞ்சை நீக்கவும், ஒடிந்த எலும்பினைக் கூட்டவும் இன்றுகூட தமிழ் மருத்துவத்திற்கீடான வேறு மருந்தேது. பண்டைத் தமிழர் பயன்படுத்திய முக்கிய பொருட்கள் யாவும் மருத்துவத்தைப் பின்னணியாகக் கொண்டவையே. விபூதி, மஞ்சள், குங்குமம் ஆகியவை கிருமி

நாசினிகளே. விடியற்காலையில் சாணி தெளிப்பது கிருமிகளி லிருந்துத் தம்மைக் காத்துக்கொள்ளவே. சுவர்களுக்குச் சுண்ணமடிப்பது கிருமிகளைக் கொல்லத்தானே! இவை இன்றளவும் அனைவராலும் பின்பற்றிப் போற்றப்பட்டு வருகின்ற தல்லவா! காற்றோட்டமுள்ள சோலைகளிலும், குன்றுகள்மீதும் கோயில் அமைத்ததும் உடல் வலிமையினைத் தோற்றுவிக்கத் தானே! ஆங்கில மருத்துவரும் அஞ்சும் அம்மை வியாதிக்கு வேப்பிலைதானே கண்கண்ட மருந்தாகப் பயன்படுகிறது. நாடித் துடிப்பறிதலும் சித்தவைத்தியம் தானே! பித்தம் தெளிய வைக்கும் சிறந்த மருத்துவம் சித்த மருத்துவமே.

பல்துலக்கும் குச்சி ( Tooth Brush ) யினை முதன் முதல் கண்டு பிடித்து உலகிற்களித்த பெருமை தமிழரைத் தானே சேரும். ஆலும் வேலும் அவர்களுக்கு உயர்ந்த பல்துலக்கும் குச்சிகளாகப் ( Superiar quality tooth brush ) பயன்பட்டன.

**மருத்துவர் :**

ஒவ்வொரு மன்னன் அவையிலும் பண்டைய நாளில் அரசாங்க மருத்துவர்கள் இருந்தனர். ஊர்கள் தோறும் இருந்த மருத்துவர்கள் ஆடம்பரமின்றி எளியமுறையில் தம் தொழிலை ஆற்றி வந்தனர். இது வாழையடி வாழையெனத் தொடர்ந்து நடைபெற்றது. பண்டைத் தமிழரின் மருத்துவம் பெரும்பாலும் இலவச மருத்துவமே. புலவர்கள் பலரும் தத்தம் நாட்களில் மருத்துவக்குறிப்புகளைக் குறித்துப் போந்தனர். மருத்துவத்தைப் பற்றிய பல நூல்கள் எழுந்தன. தேவாரம், திருவருட்பா போன்ற பக்திநூல்களிலும் மருத்துவக் குறிப்புகள் பலவற்றைப் பரக்கக் காணலாம். உலகம் போற்றும் திருக்குறள் நூலிலும் "மருந்து" என தனி அதிகாரமே அமைந்துள்ளது குறிப் பிடத்தக்கது.

மருத்துவர்களுக்கு இன்று சமூகத்தில் உயர்ந்த மதிப்பு அளிக்கப்பட்டிருப்பது போலவே பண்டைய நாளிலும் மருத்து வர்களுக்குத் தனிச் சிறப்பளிக்கப்பட்டிருந்தது. போர்க்களங் களில் இருதிறப் படைகளுக்கும் மருத்துவர் சேவை ஆற்றினர். அம்மருத்துவர் மீது போர்க்களத்தில் அம்பு செலுத்துதலைத் தவிர்த்தனர்.

தமிழக மருத்துவக் கலையின் தந்தை அகத்தியரே. இவர் குறுமுனி. மரண மென்பதே இல்லாது இன்று வரை சிரஞ் சீவியாக விளங்கிவருபவர். இவர் தலைசிறந்த மருத்துவ அறிஞர்.

மருந்துவக் கலையில் நூல் பலவும் யாத்துள்ளார்; அறுவைச் சிகிச்சை முதல் பலதுறை மருத்துவங்களிலும், மருந்துத் தயாரித்தலிலும் வல்லவர். மருத்துவப் பேராசியராகிய இவருக்கு இத்துறை மாணவர்கள் பன்னிருவர்; அவருள் சிறந்தவர் தேரையர். ஆசானைப்போல தேரையரும் மருத்துவத்தில் பேரறிஞர்.

மூவாயிரம் ஆண்டு காலம் வாழ்ந்திருந்த திருமூலர் ஆற்றிய தொண்டு அளப்பரிது. போகர் ஏழாயிரம் பாடல்களால் மருத்துவக் கலையினை அயல் நாடுகளுக்குப் பறந்துசென்று அங்கெல்லாம் பரவச் செய்தார்.

தமிழ் வளர்த்த அரும்பெரும் புலவர் பெருமக்கள் பல்லோர் மருத்துவத்துறையில் சிறந்திருந்ததாலேயே மருத்துவக் குறிப்புகளை நூல்களில் பொறிக்கலாயினர். பண்டைய நாளில் தமிழகத்தில் மருத்துவக் கலையில் சிறத்திருந்த அத்தனைப் பேரையும் விவரித்தால் இடங்கொள்ளாது.

மருத்துவம் :

> " நோய் நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும்
> வாய் நாடி வாய்ப்பச் செயல் "

என்ற அமுதத் திருக்குறள் வாக்கின்படி நோய் ஏற்படும் காரணங்களை (Causes for the Diseases) நாடியறிந்து அவற்றைத் தணித்து நோயைக் குணப்படுத்தினர். நோய் தோன்றக் காரணங்களைக் கண்டறிந்தனர்.

> " தன்னைத்தான் பேணுதாலும், சரீரத்தின் தண்டிப்பாலும்
> பண்ணுற்ற விசாரத்தாலும், பின்சல மலத்தினாலும்
> அன்னத்தை ஒறுப்பதாலும், அரைஉடல் முழுகலாலும்
> தன்மத்தை இகழ்வதாலும் சரீரத்தில் நோய்கள்தோன்றும் "

ஒருவன் தன்னுடைய உடம்பினைத் தக்க உணவு முதலியவற்றால் பேணு விடினும், மிகுந்த வேலையில் ஈடுபடுதலாலும், அவற்றிற்குப்பின் உண்டாகும் கவலையாலும், மல சலம் முதலியன சரிவர கழியாமல் உடம்பில் தங்குவதாலும், உணவைக் குறித்த நேரத்தில் உண்ணுமற் போவதாலும்; பாதி உடம்பினை மட்டும் முழுதுவதாலும்; அறச்செயலை ஆற்றுமையாலும் உடம்பில் நோய் உண்டாகுமென அறிந்தனர். இச்செயல்களை அறுத்து நோய் வராது வருமுன்னர்க் காத்தனர்.

## உணவு மருத்துவம் :

உணவின் மூலம் பல பிணிகளை அகற்றும் முறையினை அறிந்திருந்தனர். அன்றாட உணவுப்பொருளாகப் பயன்படும் பல உணவுப்பொருட்கள் மருத்துவ நோக்கங்கொண்டே சேர்க்கப்பட்டன. உணவு, மிகிசினும் குறையினும் நோய் செய்யும். ஆகவே "அற்றால் அளவு அறிந்து உண்க. அஃது உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு" அமையும். "தீ அளவு இன்றித் தெரியான் பெரிது உண்ணின் நோய் அளவு இன்றிப் படும்;" ஆகவே மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின் ஊறுபாடு உயிர்க்கு இல்லை" எனக்கூறி மருந்தே அளிக்காமல் வியாதியைக் குணப்படுத்த வேண்டுமாயின் "அருந்தியது அற்றது போற்றி உண்க" என வள்ளுவனார் குறிப்பிடுகின்றார். இதனையே 'பசித்துப் புசி' எனவும் மொழிந்தனர்.

## மருந்து தயாரித்தல் :

மருத்துவம் செய்ய அறிந்த ஒவ்வொரு மருத்துவரும் தமக்கான மருந்துகளைத் தயாரித்துக்கொள்ளவும் அறிந்திருந்தனர். இச்செயல் முறைகளைப் பண்டைத் தமிழ் நூல்களில் ஆங்காங்கே குறித்தனர். நஞ்சையும், பச்சிலையையும் குழைத்து மருந்துத் தயாரித்து அதனைக் கல்லாக்கி நீண்டகாலம் பயன்படுத்தினர். மருந்துகளைத் தேனிலும், மற்றும் பல சாறுகளிலும் குழைத்துக் கொடுத்தனர்.

## மருத்துவப் பயிற்சி ;

மருத்துவர்களுக்கு இன்று பல ஆண்டுகககலாம் நன்கு பயிற்சி அளிக்கப்படுவதை நாம் அறிவோம். இஃதொப்பவே மருத்துவர்களுக்கு நீண்டகாலப் பயிற்சிமுறை பண்டைத் தமிழரிடையே பழக்கத்திலிருந்தது. ஆயிரம் வேரினைக்கொன்று அவற்றை ஆய்ந்து அறிந்தவனே அரை வைத்தியன் எனப்பட்டான். ஈராயிரம் வேர்களையேனும் ஆராய்ச்சிசெய்து முழு வைத்தியனாக நீண்டகாலப் பயிற்சி தேவையல்லவா !

## தமிழ் மருத்துவத் துறைகள் :

பண்டைத் தமிழரின் மருத்துவம் அறுவைச்சிகிச்சையினை உள்ளடக்கியதென முன்பு கண்டோம். பேசும் மனித உயிர்களுக்கு மட்டுமன்றி பேச அறியா மாக்களுக்கும்-போர்ப்படையிலுள்ள விலங்குகளுக்கும் மற்றும் வீட்டு, காட்டு விலங்குகளுக்கும்-மருத்துவம் செய்யக் கற்றறிந்து விலங்கு மருத்துவத்திலும் தேர்ந்திருந்தனர். செடி கொடிகளுக்கும் மருத்துவம் செய்யும் தாவர வைத்தியத்திலும் திறம்பெற்றிருந்தனர். (தொடரும்).

வேளூர் தேவஸ்தானம் ( வைத்தீசுவரன்கோயில் )

# இலவச சித்த வைத்தியசாலை,

## பொற்றலைக் கையாந்தகரை கல்பம்

மணல், கூழாங்கற்களை அகற்றிப் பூமியைச் செப்பனிட்டு கறுப்புப் புழுதி மண்ணுடன் மிருதுவாய் உள்ள பூமியில் ஒரு அடி ஆழம் மண்ணை அகற்றி அதனுள் நன்ருக முற்றிப் பழுத்த காரமுள்ள சேங்கொட்டைகளை ஏழு அடுக்கு பரப்பில் நீர் தெளித்து பொற்றலைக்கையாந்தகரைக் கொடிகளைப் பயிரிட வேண்டும். அவைகள் நன்ருக வளர்ந்ததும் அவைகளை அடியில் கொய்து அதே மண்ணில் புதைக்கவேண்டும். பிறகு செடிகள் கருநிறத்துடன் காணப்படும். அவற்றைக்கல்ப முறைப்படி உண்பதற்கு முன் பூசைசெய்து அது நல்ல பலன் அளிக்க வேண்டும் என்ற தெய்வ சிந்தனையுடன் தன் இஷ்ட தெய்வத்திற்கு ஆராதித்த பிறகுதான் உபயோகிக்க வேண்டும்.

### உபயோகிக்கும் முறை :-

ஐந்து பலம் மிளகைப் பசும் கோமயத்தில் ஒரு இரவு ஊற வைத்து மறுநாள் காலை அலம்பி உலர்த்தி, மறுமுறை இளநீரில் ஊறவைத்து அலம்பி உலர்த்தி, திரிபலை கியாழத்தில் ஊற வைத்து அலம்பி உலர்த்தி சுத்தம்செய்து, கையாந்தகரை சாற்றில் ஒருநாள் ஊறவைத்து நிழலில் உலர்த்தி நன்ருகக் காய்ந்ததும் எடுத்து வைத்துக்கொண்டு தினந்தோறும் ஒரு மிளகும் முன், முறைப்படி பயிரிடப்பட்டுள்ள பொற்றலை கையாந்தகரை இலைஒன்றுமாகச்சேர்த்து காலையில் சாப்பிடவேண்டும். இவ்வாறு நாற்பத்தெட்டு நாள் வரை ஒவ்வொன்ருக அதிகப்படுத்திக் கொண்டே போகவேண்டும். பிறகு நாற்பத்தெட்டாம் நாளிலிருந்து ஒவ்வொன்ருகக் குறைத்துக்கொண்டே வரவேண்டும். இவ்வாறு ஒருவருடம் வரை விடாது சாப்பிட்டு வந்தால் பிரதசுஉள் உடம்பாகியதை நீடிக்கப்பண்ணும். உரோமம் கறுத்து வளரும். கண்களில் பிரகாசம் உண்டாகும். தேகம் வலுவடையும்.

இம்மூலிகையை அலட்சியம் செய்யாது குருஅருளை எண்ணி அவன் திரு அடியின் கண்ணே இலட்சியம் வைத்து எவ்விதமாகிலும் தினம், தினம் உட்கொண்டால் தேகத்தை அழிக்கக் கூடிய பித்தம், கபமாகிய அசுத்தம் நீங்கி தேகம் வலு உள்ளதாய் நெடுநாளைக்கு இருக்கும். முக்தி அடைவதற்குச் சிறந்த சாதனம் இதுவாகும்.

அனந்தகாலம் தொண்டுசெய்து காத்தாலும் மேற்குறித்த மூலிகையின் உபயோகத்தையும், உண்மையையும், அனுபவத்தையும் வெளியிட்டார்கள். பரம கருணாநிதியாகிய வைத்திய நாதசுவாமி அருளால் கிடைத்த இந்த கல்பத்தை அசட்டை இன்றி உட்கொண்டு வந்தால் கிடைத்தற்கு அரிதாகிய இம் மானிடப்பிறவி எடுத்ததின் பலனை அடையலாம். மேற்குறித்த மூலிகைஜலமில்லாதஇடத்தில்இருப்பின்அது அதிககாரமுள்ளது. விசேஷமானது. மேற்படி மூலிகையைக்கொண்டு தந்தசுத்தி செய்து, உள்நாக்கில் ஆள்காட்டி விரலால் தேய்க்க பித்தநீர், கபநீர் வெளியாகி கண்ஒளி உண்டாகும். அறிவை வளர்ப்பதற்கும், கவனசக்தி உண்டுபண்ணுவதற்கும், கரணம் ஓய்வதற்கும் கபத்தை அரிப்பதற்கும் இது ஒரு சிறந்த மூலிகை

இம்மாதம் வைத்தியசாலைக்கு வந்த நோயாளிகளின் எண்ணிக்கை.

| | | |
|---|---|---|
| ஆண்கள் | ... | 819 |
| பெண்கள் | ... | 978 |
| 10 வயதுக்குட்பட்ட குழந்தைகள் | ... | 729 |
| மொத்தம் | | 2526 |

வைத்தியசாலையிலேயே தயாரிக்கப்பட்டு பிரயோகிக்கப்பட்ட மொத்த மருந்தின் கிரயம் ரூ. 398—75.

இந்து அறநிலையத்துறை ஆணையர் உயர்திரு எம். எஸ். சாரங்கபாணி முதலியார் அவர்களும், சித்த வைத்திய சாலைகளை ஒவ்வொரு தேவஸ்தானங்களிலும் ஏற்படக் காரணமாக இருக்கக் கூடிய பிரதம மாகாண மாஜிஸ்ட்ரேட் உயர்திரு வி. பலராமையா அவர்களும் ஸ்ரீ வேளூர் தேவஸ்தான இலவச சித்த வைத்திய சாலை உபயோகத்திற்காக எங்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களால் வழங்கப்பட்ட 10 ஏக்கர் நிலப் பரப்பில் பயிரிடப்பட்டுள்ள மூலிகைத் தோட்டத்தையும் 9—5—66 அன்று பார்வையிட்டார்கள்.

இங்கு நாங்கள் நடத்திவரும் வைத்தியசாலையில் பல்லாயிரக் கணக்கான நோயாளிகள் முக்கியமாக ஆங்கில வைத்தியத்தில் இதுவரை மருந்தே கண்டுபிடிக்கப்படாத சில வியாதிகளால் அதிக கஷ்டப்படும் மக்கள் இங்குப் பூரண குணமடைந்து அவர்களால் வழங்கப்பட்ட நற்சாட்சிப் பத்திரங்களையும் பார்த்து அதிக சந்தோஷமடைந்தார்கள். மேலும் நோயாளிகள் இங்கு தங்கி சிகிச்சைபெற வசதிகள் செய்யும்படியும் கேட்டுக்கொண்டார்கள். மூலிகைத் தோட்டம் நவீன முறைப்படி அமைந்திருப்பதையும் பாராட்டினர் என்பதையும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## EXTRACT FROM THE VISITORS' BOOK

**Sri** Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

Visited the Free Siddha Vaidyasalai run by the Velur Devasthanam. This is an immortal institution. His Holiness the Adeenam will live immortal in the hearts of the suffering humanity.

Many cases neglected by the Allopathic Physicians have been cured in this hospital.

Opening of an impatient ward for which there is sufficient space in the building will be highly useful to the public.

(Sd.) V. Balaramiah,
Chief Presidency Magistrate.
Madras.

9—5—66

I came to know the doctor quite accidentally in the premises of the temple. It was due to the Grace of the Lord presiding here at Velur. A student of mine at the college was getting weak. He was sent here for treatment. The doctor has shown remarkable diagnostic acumen. The boy has scarcely had treatment for a week. He feels immensely better. He has been able to recover quickly and take his examination.

I am very much impressed by the courteous treatment of the doctor. He has a through knowledge of the system of medicine he is practising. He has a keen and an enquiring mind.

I pray to Lord Vaidyanatha that the services of the doctor may be spared for many more years to come so that the sick and suffering would obtain the right type of relief at the appropriate hour.

(Sd.) C. Ramalingam,
Principal,
Poompuhar College of Oriental Culture,
Malaiyur.

# தையல்நாயகி அந்தாதி

## [ மூலமும் உரையும் ]

*(மலர் 25, இதழ் 7 பக்கம் 289இன் தொடர்ச்சி)*

கற்பகந் தேனுசிந் தாமணி யிந்திரன் கன்னனென்று
நெற்பக வேனு முவந்துத வாதகன் னெஞ்சுடைய
வற்பரைப் பாடிலேன் நாளுன் றிருப்புக ழன்புடனே
பற்பல சொற்றிடு வேன்றைய னாயகி பாலிப்பையே 22

(இ - ள்) நெல்லின் பிளவு போலுஞ் சிறிய அளவாகிலும் உளம் உவந்து உதவாத இளகாத கருங்கல் நெஞ்சுடைய இழி குணமுடைய சிறியவர்களை நோக்கி கேட்டதை யளிக்கும் (வாட்டமில்) கற்பகதருவே, சிந்தாமணியே, தேவ இந்திரனே, கன்னன் எனும் வள்ளற்பெருமகனே என்று பலபடியாகப் பாட மாட்டேன் (பாடுதலைச்செய்யேன்) தையல்நாயகித் தாயே! நாள்தோறும் தேவரீருடைய திருப்புகழினைப் பத்தியுடனே பலப்பலவகையாகச் சொல்லித் துதிப்பேன் திருவருள் வழங்கி யருள்வீராக. எ - று.

(கு - ரை) பாலித்தல் - கொடுத்தல். அற்பர் – சிறியவர். (அற்பம் - சிறுமை) பகவு - பிளவு. திருப்பாற்கடல் கடைந்த காலத்துண்டாயவை. கற்பகம் சிந்தாமணி. காமதேனு முதலியவை. இந்திரன் - நூறு அசுவமேதயாகஞ் செய்து சதமகன் எனப் பெயர் பெற்றுப் பெரும்பதவி பெற்றவன். செல்வப் பெருக்குடையன் என்று பொருள்.

பாலனை முண்டு கரிமே லுலாவந்திப் பார்முழுதும்
பாலனஞ் செய்யும் பரிசென்னி லேன்மலர்ப் பங்கயன்கோ
பால னரிபுகழ் தாயுன் றிருவடிப் பண்புரைக்கும்
பால னருள்புரிந் தாளாய் தயிலம்மைப் பார்ப்பதியே. 23

(இ - ள்) இனி பால் சோறு அருந்திக் களிற்று யானை மிசை ஏறிப் பவனிவந்து இந்நிலை முற்றும் ஒற்றைக்குடை நிழற் கீழ் ஆட்சிபுரியும் தன்மையினையும் கருதிலேன். தாமரை மலரோனாகிய பிரமனும், பசுக்களைப் பாதுகாப்பவனாகிய நாராயணனும் (திருமாலும்) தேவேந்திரனும் சந்நிதிமுன்னின்று புகழ்கின்ற அம்பிகையே! தையலம்மையாகிய பார்வதிப் பிராட்டியாரே! தேவரீருடைய திருவடிப்பண்பாட்டினைப்பற்றியே பாராட்டியிருக்கும் பாலனாகிய இச்சிறுவனுக்கு அருள்தந்து ஆண்டருள்க. எ-று.

(கு - ரை) பால் அன்னம் - பாலன்னம். பாற்சோறு. பாலனம் - காவல் புரிதல். (காப்பாற்றல்) பாலனம் - ஆட்சிபுரிதல். பாலன் - அறிவிற் சிறுவன். (குழவி). அரி - இந்திரன். பரிசு - தன்மை.

பாரின் வினைதனைப் பாற்றிடுவான்பதி பத்தர்களைச்
சேரின் னிலையொழித் தேயருள்வார்மக்கள் செல்வியுனைத்
தேரிற் பசிதனிப் பாயுமக்கேதொண்டு செய்தும்விழ
ஞரிடத் தேயுரைப் பேன்றைய லுயகியாதரியே. 24

(கூ - ள்) கருமபூமியாகிய இவ்வுலகினிடை இருவினை மயக்கினை யொழிக்கும்படி சிவனடியார்களைச் சேர்ந்தால், அவ் வினையாளருடைய வினைகளைப்போக்கி கருணைபாலிப்பார்கள். (பதிபத்தர் - சிவனடியார்) மக்கள் தம் செல்வமாக விளங்கும் தையல்நாயகியே! உன்னைத் தெளிந்தால் பசிப்பிணி போக்கிடு வாய், தங்களுக்குத் தொண்டு பூண்டு ஒழுகின் வேண்டுவன வற்றிற்கு யாரிடம்போய்க் கூறிக்கொள்வேன் இதனைத் திருவுளம் பற்றி யாதரித்தருள்க. எ - று.

(கூ - ரை) பார் - பூமி. வினை - நல்வினை தீவினை. பாற்றல் - சிதறுண்டு போகச்செய்தல். நிலையொழித்தலாவது - துயருறு நிலை நீக்கி இன்புறு நிலையுறச் செய்தல். தொண்டு - அடிமை. ஆதரித்தல் - அன்புகொடு சேர்த்துக்கோடல்.

ஆதரங் கொண்டுன் றிருவருட் கேக்குற் றலைகின்றனன்
பூதர வில்லிக் கருமருந் தாகிய பொற்புடையாய்!
நீதரம் பார்த்தெனைத் தக்கவ னென்றக நேசமுற்றே
யாதர வாயளிப் பாய்தைய லுயக வந்தரியே. 25

(இ - ள்) மேருமலையினை வில்லாகவுடைய வைத்தியநாதப் பெருமானுக்கு அரிய மருந்தாக இலகும் அழகினையுடையவளே! தையல்நாயகியாகிய தாயே! ஆசைகொண்டு தேவரீருடைய திருவருளினைப் பெறுவதற்கு மிகத் தாழ்ந்து அலைகின்றேன். தேவரீர் அடியவனைத் தகுதிநோக்கிப் பக்குவமுற்றவன் என்று கருதித் திருவுள்ளத்தன்புகொண்டு பற்றுடன் அத்திருவருளைப் பாலித்தருள்வீராக. எ - து.

(கு - ரை) ஆதரம் - அன்பு, ஆசை. ஏக்குறல் - ஆசையால் தாழ்தல். பூதரம் - மலை. அருமருந்து - தேவாமிருதம். பொற்பு - அழகு. தரம் - தகுதி. நேசம் - அன்பு(பற்று). அந்தரி - மனக்குகையில் எழுந்தருளிச்செய்யும் ஞானசொரூபி.

(தொடரும்)

# வேலூர் தேவஸ்தானம் இந்து அனாதைக் குழந்தைகள் விடுதி

# பதின்மூன்றாவது ஆண்டு நிறைவு அறிக்கை

( மலர் 25, இதழ் 7, 294-ஆம் பக்க தொடர்ச்சி )

## உடல் வளர்ச்சி

குழந்தைகளின் தேக ஆரோக்கியத்துக்கு வேண்டிய விளையாட்டுடன் கூடிய தோட்ட வேலையும் கொடுக்கப்படுகிறது; அதனால் லாபம் ஏற்படுவதுடன் வேலைத்திறமையும் ஏற்படுகிறது. வருடா வருடம் பயிரிடுவதில் ஏற்படும் லாபத்துடன் கூட 1964. 1965, 66'ல் நல்ல லாபம் ஏற்பட்டுள்ளது மாதம் சராசரி 30 ரூபாய்க்குமேல் லாபம் கிடைக்கிறது. வேலி அடைத்தல், கொத்தி பயிரிடுதல் களை எடுத்து எரு வைத்தல் தண்ணீர் ஊற்றிப் பாதுகாத்தல் முதலிய சகலமும் அவர்களே செய்கின்றனர். தங்களால் பயிரிடப்பட்டதில் கிடைப்பதைக் கண்டு ஆனந்தமும் அடைகிறார்கள்.

## தெய்வக்குழந்தைகள் (பக்தி வளர்ச்சி)

உடல் வாழ்வுக்குவேண்டிய வசதி அளிக்கப்பட்டது. ஆனால் உயிருக்கு ஆபத்து ஏற்படாமல் ரட்சிப்பது தெய்வ அருள் அல்லவா? தெய்வ அருள் மூவரின் அருளாகத் துணைநின்று குழந்தைகளின் உயிரை, பயத்தைப் போக்கியதை - அகிலத்து நாயகியின் குழந்தைகள் பெற்ற அருளை அறிந்துகொள்வோம். இருதய நோய்க்காளான ஓர் பையன் நீண்ட நாட்களான நோயுடையவன். அந்தநோய் அதிகமாகி தன் நினைவற்று இருந்தவனை டாக்டர் அழைத்து வந்து காண்பிக்கப்பட்டது. பரிசோதித்த டாக்டர் இரவு செல்லவேண்டுமென்று கூறி மருந்து கொடுத்துச் சென்றார். மருந்தளித்தபின் அம்மை அப்பனை வேண்டி அசதியால் கண்மூடியபோது, " வேப்ப மரம் ஒன்று விடுதியின் அருகில் - அதன் அருகில் மேடை. மேடையில் தெய்வசின்னங்களோடு கூடியவயதான பெரியவர் ஒருவர்; வேப்ப மரமும் பெரியவரும் புதிதாக இருக்கிறதே! என்று அருகில் சென்று விசாரித்தபோது, ஒரு குழந்தைக்கு உடல் நலமில்லை என்று வருந்தினாயே என்று அவனுக்கு மருந்து கொடுத்துச்செல்ல வந்தேன் என்றார் பெரியவர். திடுக்கிட்டு விழித்தபோது, வந்தவர் அப்பன் வைத்தியநாதன் என்று

தெரிந்தது. விடிந்தது, பையன் வாழ்வில் வேதனை நீங்கியது. உயிர் பிழைத்துவிட்டான். தீராது என்று கூறப்பட்ட அந் நோய் இன்றுவரை அப்பையனிடம் அணுகவில்லை. தனயன் செல்வமுத்துக்குமரனிடம் இயற்கையிலேயே பக்திகொண்ட ஓர் பையன். அவனுக்குள்ள வியாதியோ டாக்டர்களுக்கும் புரியாத பயங்கர வலிப்புநோய். அதுவும் தெய்வ சந்நிதிகளில் ஆரா தனையாகும்போது கீழே சாய்ந்துவிடும் அவன் உடல் வலிப் பால் தூக்கிப் போடுவதை இரண்டு மூன்று பேராக அமுக்கி னாலும் அடங்காமல் 10 நிமிஷங்கள் அவ்வாறு இருந்து பிறகு 1 மணி நேரம் மயக்கமாக இருப்பான். எந்த வைத்தியத்துக்கும் கட்டுப்படாத அந்நோயை நோய் தீர்க்கும் வைத்தியநாதனே அவர்கள் தந்தையாக இருக்கும்போது நாம் ஏன் கவலைப்பட வேண்டுமென்று வைத்தியநாதன் மருந்தும் வாங்கி கொடுத்து சாப்பிடச் செய்ததுடன் இருவேளையும் சந்நிதியை வலம் வரவும் செய்யப்பட்டது.

மூன்று வருடங்கள் அவ்வியாதியால் துடித்தான். பார்த்த வர்களும் அவன் அவஸ்தைகண்டு கண் கலங்கும்படியான நிலை. புழுகு காப்பு ஆகும்போது அவன் துன்பம் அதிகமாகும். சிலர் அவஸ்தைப்படும்போது அவனை அழைத்துவருவானேன் என்று கூறினார்கள். அதைக் கேட்காததுமல்லாமல் அவன் தவறாமல் அழைத்து வரப்பட்டான். புழுகுகாப்பு ஆராதனைக்குத் திரை தூக்கப்பட்டவுடனே கீழே சாய்ந்துவிடுவான். வலிப்பும் மயக் கமும் வந்து விடும். தரையில் சாய்ந்ததால் ஏற்பட்ட புண் வடு இன்னும் அவன் தலையில் உள்ளது. ஓர்நாள் மயக்கநிலை; ஓரே பயங்கர இருட்டு, செல்வதோகாடு, காட்டின் நடுவில் தனித்துச்செல்லும் அப்பையனுக்கு வழி தெரியவில்லை. பயத் தோடு அழுதுகொண்டு நின்றான். அப்பொழுது அழகிய இளமை பொருந்திய தெய்வீக சின்னங்களோடு கூடியவர் (விடுதியில் பூஜையிலிருக்கும் முருகன் உருவம்போல்) அவனிடம் வந்து ஏன் அழுகிறாய் என்று கேட்க, எனக்குப் பயமாக இருக் கிறது. வழியும் தெரியவில்லை என்றுகூற. வருந்தாதே நான் உன்னை அழைத்துச் செல்கிறேன். நீ என் புழுகு காப்புக்கு 48 நாட்களுக்கு தொடர்ந்துவா உன் பயம் நீங்கிவிடும் என்று கூறி வெளிச்சமான இடத்திற்கு அழைத்து வந்ததும், மயக்க நிலை நீங்கி கனவைக் கூறினான். தொடர்ந்து செல்லாமல் இருந்த புழுகு காப்பு தரிசனத்திற்குத் தொடர்ந்து சென்றான். குமரனின் அருளால் அவன் வியாதி பரிபூர்ணமாக நீங்கி 5 வருடம் ஆகின்றது. குமரனை என்றும் அவன் மறவாமல் இருக்க வடுவை யும் கொடுத்துள்ளான்.

அப்பன், செல்வன் அருள் பெற்ற குழந்தைகளுக்கு அன்புத்தாயின் அருளும் துணை நிற்குமல்லவா! அன்னையின் அருள் எப்படி ஏற்பட்டது என்று அறிவோம். ஒரே இருட்டு மணியோ பன்னிரண்டு. யாரையும் எழுப்பாமல் வெளியில் துணிவோடு தனித்துச் சென்றான். பயத்துடன் ஓடிவந்து படுத்து விட்டான், இரவில் இரண்டு நாட்களில் பயம் ஏற்பட்டும் யாரிடமும் சொல்லவில்லை. மூன்றாம் நாள் இரவு பயத்தால் அலறினன். அம்மை அப்பனை வேண்டி விபூதி பூசியதும் தூங்கினான். தூக்க நிலையில் விடுதியின் பூஜை அறை. மேடையில் சிவலிங்கம்; அதை வழிபாடு செய்யும் ஓர் அம்மாள் உடலோ அழகிய நிறத்துடன் கூடியது. அழகிய உடலில் நகைகள், உடையோ பச்சைப்பட்டு. பூஜை செய்யும் அந்த அம்மாளின் அருகில் அப்பையன் அமர்ந்து இருக்கிறான் பூஜை முடிந்து பிரசாதம் அளித்த அந்த அம்மாள் உனக்கு பயம் ஏற்பட்டாலும், கஷ்டம் நேர்ந்தாலும் கடவுள் பெயரைச் சொல், என்று கூற அதற்கு அப்பையன் "அச்சமயத்தில் கடவுள் பெயரைச் சொல்ல மறந்துவிடுகிறதே" என்று கூற கடவுள் பெயர் சொல்ல மறந்தால் "அம்மா" என்று அழை உன் கஷ்டம், பயம் நீங்கும் என்று கூறினாள் அம்மாளாக வந்த அன்னை. விடிந்தது, கனவைக் கூறினான் அன்னையின் குழந்தைகள் அல்லவா! பயத்தைப் போக்கவும், தன்னை அம்மா என்று அழைக்கும்படி கூறிச் சென்றுள்ளாள். என்னே! தாயின் அன்புள்ளம்.

முற்றும் உணர்ந்தவர்கள் அல்லவா! ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்கள். அதனால்தான் அ-நா-தை குழந்தைகள் என்ற பெயர் சூட்டி,பொறுப்பை அன்னையிடம் அளித்துவிட்டார்கள் போலும். அம்மை, அப்பனின் செல்வனின் அருள், குழந்தைகள் விஷயத்தில் மட்டும் நடக்கவில்லை. குழந்தைகளின் பொறுப்பைக் கவனித்தவர்கள் கடமையையும் உணர்த்தி உள்ளார்கள். வேம்படியிலிருந்து ஓர் பாம்பு விடுதியின் சுவர்கள் வழியாக வந்து விடுதிக் கண்காணிப்பாளரை எழுப்பி வெளிக்கதவு திறந்து இருக்கிறது. திருடன் நுழைந்துவிடுவான் பூட்டச்சொல் என்று சொல்லி மறைந்தது இரவு மணி 3, பையன் வந்து கண்காணிப்பாளரிடம் கனவை சொன்னான். வெளியில் சென்றால் கதவு பூட்டப்படாமலிருக்கிறது. வெளியில் திருடனை துரத்திச் செல்பவர்களின் சத்தம். வெளியில் சென்று பார்த்ததில் விடுதிக்கு எதிரில் உள்ள சந்தில் திருடன் ஒருவன் மூட்டையுடன் ஓட, திருடிச்சென்ற அவனை ஊரார் துரத்திக்கொண்டு சென்றார்கள், சில வருடங்களுக்குமுன் ஊரில் திருட்டு பயமாக இருந்தபோது இது நடந்தது. இரவும் பகலும் குழந்தையின் உடல்நிலை சரி

யில்லையே என்று கவலையால் விடுதியின் கடமையில் சிறிது அஜாக்கிரதையாக இருந்த விடுதிக் கண்காணிப்பாளர் கனவில் அவன் அன்பர்போல் தோன்றி ஏன் வாட்டமாய் இருக்கிறாய், பையன் உடல் நலமில்லையா'' என்று கேட்க. ஆம் என்று கூற. நீ விடுதியின் கடமைகளைச் சரியாகச் செய்து, குழந்தைகளை உன் குழந்தைகளாக நடத்து, அவன் வியாதி நீங்கிவிடும் என்று கனவில் வந்து கடமை உணர்த்தியவன் முத்துக்குமரன். அவன் அருளால் அப்பையனின் வியாதி நீங்கியது. கடமையைக் கவனிக்கவேண்டிய திறமையையும் அளித்து வருகிறான்.

மூவரின் அருள்விளையாட்டு விடுதியில் இன்னும் பலவிதத்தில் நடந்துள்ளது. அந்த மகிமையை எடுத்துச் கூறதிறமை இல்லையே! அவர்கள் பெருமையை யாரால்தான் எடுத்துக்கூற முடியும். மூவரின் அருள்பெற்ற இக்குழந்தைகள் மிக பாக்கியம் செய்தவர்கள். ''இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து அதனை அவன் கண் விடல்'' என்ற கருத்தை மனதில் கொண்டு விடுதியில் வேலை பார்ப்பவர்களையும் அறுதையாக அன்னை அருள்பெற்றவர்களாக நியமித்துள்ளார்கள்போலும். விடுதியின் நிர்வாகத்திற்காக நியமிக்கப்பட்டவர்களும் அனைவரும் தெய்வபக்தி கொண்டவர்களே. அவர்களும் விடுதியின் பொறுப்புக்களை சரிவரசெய்து குழந்தைகளிடம் பாசத்தோடும். வேறுபாடு கருதாமல் ஓர் குடும்பம்போல் ஒற்றுமையாக வாழ்ந்து வருகிறார்கள். ''சமன் செய்து சீர்தூக்குங் கோல்போல், அமைத்தொருபாற் கோடாமை சான்றோர்க்கணி'' என்ற தெய்வப்புலவரின் கருத்தை மனதில் கொண்ட நடுநிலைமை தவறாத ஏழை, பணக்காரன் என்ற பாகுபாடு கருதாத ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானமவர்களின் அன்பும் ஆதரவும் பெற்று மூவரின் அருள் பெற்றவர்கள் இத்தெய்வக் குழந்தைகள். ஸ்ரீலஸ்ரீ மகா சந்நிதானம் அவர்கள் விடுதி குழந்தைகளை நேரில், அழைத்தும் குழந்தைகளிடம் அன்பாகபேசி, குறைவில்லாமல் எல்லாம் நடைபெறுகிறதா என்று கவனிப்பதுடன், தானும் குழந்தைகளுக்குப் பழங்கள், சிற்றுண்டிகள் அளித்தும் அவர்கள் உண்பதை கண்டு களித்தும், களிப்பால் தானும் குழந்தையாகி விடுவார்கள், ''எல்லோரும் இன்புற்றிருக்க'' என்ற தாயுமானவரின் கருத்தில் தோன்றி, ஏழைகளை மகிழச்செய்து. ''என்கடன் பணி செய்து கிடப்பதே'' என்று வாழ்பவர்களின் ஆதரவும், அம்மை, அப்பன், செல்வனின் அருள்பெற்று வாழ்பவர்கள் அ·நா·தை இல்லத்து குழந்தைகள்.

திக்கற்றவர்களா? அல்லது ஏழைகளா? இல்லை. அவர்கள் எல்லாம் நிறைந்தவர்கள். வாழ்வில் எளிதில் கிடைக்காத

தெய்வ அருள்பெற்றவர்கள். இந்தக் குழந்தைகளின் வாழ்வை எண்ணிப் பார்க்கும்போது நாமும் குழந்தைகளாகி விடுதியில் சேர்ந்து அப்பாக்கியத்தைப்பெற நம்மனம் விரும்பும். ஆனால் நமக்கு கிடைக்காது அப்பாக்கியம். அம்மை, அப்பன் அருளை யாவதுபெற முயற்சிக்கலாமல்லவா ! விடுதியில் இருந்து சென்ற வர்களும் தங்கள் நல் வாழ்வு ஏற்பட்டதால் விடுதியை மறவாமல் வந்து அம்மையைத் தரிசித்து அம்மை, அப்பனை தரிசிக்க வரும் அன்பரையும் "நன்றி மறப்பது நன்றன்று" என்று நன்றி மறக்காமல் வந்து தரிசித்துச் செல்கிறார்கள்.

## எதிர்கால வளர்ச்சி

விடுதியின் கட்டிடம் பல்லாண்டு காலம் சரியான நிலையில் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தால் விடுதிக்கு கட்டிடம் வேறு கட்டப்படுகிறது. வேலை முடிந்ததும் இன்னும் பல குழந்தைகளைச் சேர்த்து பயன் அடையச் செய்யவேண்டும். குழந்தைகள் அனைவரும் குறைந்தது பள்ளி இறுதித் தேர்வு முடிக்க வேண்டும். கைத்தொழிலும் மேற்கொண்டு ஆரம்பித்து அதிலும் தேர்ச்சியடையச் செய்ய வேண்டுமென்ற தீர்மானம் இருக்கிறது. அத்தீர்மானம் "வேண்டத்தக்கது அறிவோய் நீ வேண்டமுழுதும் தருவோய் நீ" என்று அம்மை அப்பனின் அருளால் ஈடேறிவிடும். இன்னும் பல குழந்தைகள் வாழ்க்கை பயனுடையதாகும்.

விடுதிக்கு விஜயம் செய்த பல பெரியவர்களின் ஆசியும் குழந்தைகளுக்குக் கிடைத்திருப்பதுடன் அவர்கள் கலைத்திறமை, கைத்திறன், தொழில்திறன், கட்டுப்பாடு இவற்றைப் புகழ்ந்து செல்வதுடன் சந்நிதானமவர்களின் தொண்டையும் பாராட்டிச் செல்கிறார்கள். திருமதி. ரூர்து அம்மாள் சைமன், திருமதி. பிருந்தாதேவி, சுதேசமித்திரன் ஆசிரியர் இன்னும் பலர். காந்தி கிராமத்திலிருந்து விடுதியைப் பார்வையிட வந்தவர்கள், குழந்தைகள் சுத்தத்தோடும், கட்டுப்பாட்டுடனும் சுதந்திரத்தோடும், பொறுப்போடும், மரியாதையோடும் நடந்துகொள்வதுடன் இந்த இளவயதிலேயே பக்தியோடும் இருக்கிறார்கள். நிர்வாகம் நன்றாக நடக்கிறது என்று புகழ்ந்து சென்றார்கள். சென்றவர்களும் காந்திகிராம பிரார்த்தனையிலும் எடுத்துக்கூறி புகழ்ந்தார்கள். இந்த சிறப்புக்கெல்லாம் காரணம் துன்புற்றவர்களின் துன்பம் நீக்கி மேற்கொண்டு துன்பம் உலகில் ஏற்படக்கூடாது என்ற கருத்தையே திருவுளத்தில் கொண்டு வாழும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமவர்களின் கருணையுள்ளமே. வாழ்க அம்மை, அப்பன், செல்வன். வளர்க அவர்கள் அருள். வாழ்க எங்கள் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம். வளர்க அவர்கள் தொண்டு.

## EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

**Sri Amirthagatesvaraswamy Devasthanam, Tirucadaiyur.**

The Kripa Amactures Bajan Mandali headed by Dr. V. Ramamoorthy visited Thirukkadavoor and the observations we have made in Vaidhyanathaswamy temple hold good here. The temple is so neat and is like our house. There is not a spec of dust even in the Gharbagraham. We have been singing Abirami Andhathi so far in all our bajans. To-day we had the previlage of singing for an hour before Devi, we thought we were addressing Abirami and she was talking. The executive staff were so good and kind, that we think of going over here every year.

The whole credit goes to the Adhinam Avl.

Members of the Kripa Amactures Bajan Mandali, 13—6—66.

(Sd.) V. Ramamoorthy, M.B.B.S.
1, South Mada St
Mylapore.

**Sri Vaidhianathaswamy Devasthanam, Vaithiswarankoil.**

Cleanliness is next to Godliness is illustrated by keeping all around the Deity so clean.

Chairman,
9—6—66. Neyveli Lignite Corporation.

Sri Sattanathaswami Devasthanam, Shiyali.

"I worshipped in this temple today. The admirable way in which the temple is maintained particularly the high standard of sanitation is worthy of emulation."

(Sd.) T. P. Karunakaran Nair
(P. A. to Collector, Tanjore)

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswamy Devasthanam, Vaithiswarankoil.

I had the rarest opportunity, by the grace of Lord Sri Vaideeswara to visit this temple today with my family. It is really soul inspiring and the divine grace and solace obtained at this temple during 'Darshan' is beyond expression. The cleanliness with which the temple is being maintained adds to the devotion. In this respect the temple is next to none. The grace and mental satisfaction obtained in this temple is inexplicable.

(Sd.) B. R Seshan,

9—6—66. Asst. Engineer P. W. D. Salem.

Myself and my wife with a band of twenty Bakthas on a tour throughout the important places of worship in South India had the greatest and unique opportunity of worshipping Sri Vaidyanatha and Ambal and Muthukumara today. Though I have heard a lot about the way the great Adheenam is maintaining temples this opportunity gave me an idea of it and I am able to understand the difference in management berween the Adheenam and others. The sincerity with which the office assistants receive the worshippers and the way in which we had the Dharshan will stimulate and inculcate Bakthi even tor a Nasthik. I pray to Lord Vaidyanatha that he must give more and more of energy, power wealth and health to the Head of the institution and the band of workers under him.

We want to have our bajan once in this temple and I request the Adheenam to give us a chance.

(Sd.) V. Ramamurthi, M. B. B. S.
and members of the
Kripa amactures Bajan Mandal
1, South Mada St Mylapore.

# பன்னிரு திருமுறை

வித்துவான்,

## ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

ஆசையறுய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணுய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீநினையாய் – சீச்
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய். ''

—ஸ்ரீகுருஞானசம்பந்தர்.

### திருமுறை என்ற சொல்லின் பொருள் :

பாடுவோரையும், பாடக் கேட்போரையும் இறையுணர்வில் விரைவில் ஈடுபடச் செய்யும் ஆற்றல் தோத்திரப் பாடல்களுக்கு உண்டு. அத்தகைய பாடல்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குவது நம் தமிழ் மொழியேயாகும். இது எம்மொழிக்கும் இல்லாத தனிச் சிறப்பாகும். தமிழ்த் தோத்திரங்களுள் தலை சிறந்து விளங்குவன திருமுறைகள். திரு என்ற சொல் உபசாரமாக உலகியல் செல்வங்களைக் குறித்தபோதிலும், உண்மையில் சிவபரம் பொருளையும். சிவத்தோடு இணைபிரியாதிருக்கின்ற அருளாகிய சக்தியையும், அச்சிவசக்தியின் துணையால் உயிர்கள் அடையும் பேரின்பத்தையுமே குறிக்கும். ''திருவே என் செல்வமே'' என்ற விடத்துந் திரு என்ற சொல் சிவபெருமானைக் குறிப்பதும், 'சென்றடையாத திருவுடையானை'' என்ற விடத்துத் திரு என்னும் சொல் அருளாகிய சிவசக்தியைக் குறிப்பதும் ''சிவமே பெருந்திரு எய்திற்றிலேன்'' என்ற விடத்துத் திரு என்னும் சொல் பேரின்பத்தைக் குறிப்பதும் கொண்டு இக் கருத்தை நன்கு தெளியலாம். முறை என்ற சொல் பல பொருள் குறிக்கும் ஒரு சொல்லாயினும் இங்கு மனக்கோணலை நீக்கி வாழ்க்கை முறையை ஒழுங்குபடுத்தும் நூலையே குறிக்கும். ''இறை நிலம் எழுதுமுன் இளைய பாலகன் முறை வரைவேன் என முயல்வதொக்கும்'' என்ற கந்தபுராண அவையடக்கச் செய்யுளால் இக் கருத்து நன்கு புலனும்.

## தோகைச் சிறப்பு :

இத் திருமுறைகள் பன்னிரண்டாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இவற்றை அருளிச் செய்தவர்கள் திருஞானசம்பந்தர் முதல் சேக்கிழார் பெருமான் முடிய உள்ள இருபத்தேழு அருளாசிரியர் களாவார்கள். திருமுறைகளின் எண்ணிக்கையாலும், ஆசிரியர் களின் எண்ணிக்கையாலும் இங்கு ஒரு தனிச் சிறப்பைக் காணலாம். வான வெளியை நம் அறிவில் அளவிட்டு உணர் தற்கு இருபத்தேழு நக்ஷத்திரங்கள் துணை செய்கின்றன. அது போல இறைவனது பேரருள் வெளியின் இயல்பினை நம் மனத்திற்கொண்டு உணர்தற்குத் துணைபுரிந்தருளும் திருமுறை ஆசிரியர்களும் இருபத்தெழுவராய் இலங்குகின்றனர். மேலும் இவ்விருபத்தேழு நக்ஷத்திரங்களைத் தான் பன்னிரண்டு வீடு களாகப் (இராசிகளாக) பிரித்து உணர்ந்து காலதத்துவத்தின் நுண்ணிய ஆற்றலை உணர்கின்றோம். அது போலவே இவ்வாசிரியர்களின் அருள் வாக்குக்களையே பன்னிரண்டு திருமுறைகளாகப் பகுத்துணர்ந்து காலகாலனாகிய முதல்வனது பேரருட்டிறத்தினை உணர்ந்து பயன் கொள்ளுகின்றோம். புற இருளைப்போக்கிப் பொருள்களைக் காட்டும் சூரியன் பன்னிரு வகைப்பட்டாற் போல, அக இருளை அகற்றி சீவான்மாக்கள் பரமான்மாவை உணர்ந்து இன்புறத் துணைபுரியும் திருமுறை யும் பன்னிருவகைப்பட்டிலங்குகின்றது.

## தேவாரம் — அடங்கன் முறை :

பன்னிரு திருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகள் 384 பதிகங்களாக 4181 பாடல்களாக அமைந்துள்ளன. இவற்றை அருளிச்செய்தவர் திருஞானசம்பந்த சுவாமிகளாவர். அடுத் துள்ள 4, 5, 6, திருமுறைகள் 315 பதிகங்களாக 3066 பாடல் களாக அமைந்துள்ளன. இவற்றை அருளிச் செய்தவர் திருநாவுக்கரசு சுவாமிகளாவர். ஏழாவது திருமுறை 100 பதிகங்களாக 1026 பாடல்களாக அமைந்துள்ளது. இதனை அருளிச் செய்தவர் சுந்தரமூர்த்தி சுவாமிகளாவர். இவ்வேழு திருமுறைகளும் தேவாரம் எனவும் அடங்கன் முறை எனவும் வழங்கப் பெறும். தே-என்பது தெய்வத்தையும், வாரம்-என்பது அன்பையும் குறிக்கும். எனவே தெய்வத்தினிடத்து உயிர் கட்டு அன்பை விளைவிக்கும் இவ்வருட் பாடல்கள் தேவாரம் எனப் பெற்றது. மேலும் வாரம் என்பதை ஆரம் எனப் பிரித்துத் தெய்வத்திற்கு அணிவிக்கும் மாலை போல்வது என்றும் பொருள் கொள்ளலாம். வாரம்-என்ற சொல்லிற்கு

உரிமை என்ற பொருளும் உண்டாகலின் சிவமுதலாகிய தெய்வத்திற்கே உரிய பொருள்சேர் புகழைப்பாடும் பாடல்கள் என்பதும் கொள்க. மனம் அடங்கக் கல்லார்க்கு வாய் ஏன்? என்றார் தாயுமானார், உலகியற் கல்வி நம்மை வெள்ளம் அடங்கும் விரிசடையார்க்கு ஆளாக்கி உள்ளத்தை அடங்குமாறு செய்யும் உயர்வுடையது. இச் சிறப்பினால் தான் கற்றறிந்து அடங்குவதே முறை என்பதைத் தெளிய உணர்த்தும் இத் திருமுறைகள் அடங்கன் முறை என வழங்கலாயின.

ஏனைய திருமுறைகள் :

எட்டாந் திருமுறை, திருவாசகம், திருக்கோவையார் என இரு பிரிவாக அமைந்துள்ளது. அவற்றுள் திருவாசகம் 51 பகுதிகளாகவும், 656 பாடல்களாகவும் அமைந்துள்ளது. திருக்கோவையார் 400 பாடல்கள் கொண்டிலங்குவது. இத் திருமுறையை அருளிச் செய்தவர் மாணிக்கவாசக சுவாமிகளாவர் எட்டாந் திருமுறை வரை அருளிச் செய்த ஆசிரியர் நால்வரும் சமயாசாரியர் எனப் பெறுவர். ஒன்பதாந் திருமுறை திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என இரு பிரிவாக அமைந்து விளங்குகின்றது. அவற்றுள் திரு இசைப்பா 28 பதிகங்களாகவும், 588 பாடல்களாகவும் இலங்குகிறது. திருப்பல்லாண்டு ஒரு பதிகமாகவும் 13 பாடல்களாகவும் அமைந்துள்ளது. இத் திருமுறையினை அருளிச் ,செய்த ஆசிரியர்கள் திருமாளிகைத் தேவர், சேந்தனார் கருவூர்த் தேவர், பூந்துருத்திநம்பி காட நம்பி. கண்டராதித்தர், வேணாட்டடிகள், திருவாலியமுதனார் புருடோத்தம நம்பி, சேதிராயர் ஆகிய ஒன்பதின்மராவர். இவர்களுள் சேந்தனார் என்பவரே "பல்லாண்டு" அருளிச் செய்தவராவர். பத்தாந்திருமுறை 28 ஆகமங்களுட்பட்ட காரணம் காமிகம் வீரம், சிந்தம், வாதுளம் காலோத்தரம், சுப்பிரபேதம் மகுடம், வியாமளம் என்னும் ஒன்பது ஆகமங்களின் சாரம் 9 தந்திரங்களாகத் திருமூலரால் அருளிச் செய்யப் பெற்றதாகும். இது மூவாயிரம் பாடல்களைக் கொண்டிலங்குவது, ஆனால் இப்பொழுது 3047 பாடல்கள் காணப்படுகின்றன. பதினொராந் திருமுறை 40 பிரபந்தங்களாகவும் 1416 பாடல்களாகவும் அமைந்து விளங்குவது. இதனை அருளிச் செய்தவர்கள் திருவாலவாயுடையார் (சிவபெருமான்), காரைக்காலம்மையார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார் சேரமான் பெருமாள் நாயனார், நக்கீர தேவ நாயனார், கல்லாடதேவ நாயனார் கபிலதேவ நாயனார், பரணதேவ நாயனார் இளம் பெருமான்

அடிகள், அதிராவடிகள், பட்டினத்துப் பிள்ளையார், நம்பி யாண்டார் நம்பிகள் ஆகிய பன்னிரண்டு அருளாசிரியர்களா வார்கள். பன்னிரண்டாந் திருமுறை சேக்கிழார் சுவாமிகளால் அருளிச் செய்யப் பெற்றது. இது 2 காண்டங்களாகவும், 13 சருக்கங்களாகவும், 4253 செய்யுட் களாகவும் அமைந்து 63 தனியடியர்களின் பெருமையையும், 9 தொகையடியார்களின் சிறப்பையும் உள்ளவாறு உணர்த்துவது.

## திருமுறை ஆசிரியர்களின் காலம்:

ஸ்ரீ திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் கி. பி. ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர்கள். சுந்தரர் 8-ம் நூற்றுண்டின் இறுதியிலும் 9-ம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவர். மாணிக்கவாசகர் கி. பி. மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்தவர் எனத் தெரிகிறது. திருவிசைப்பா ஆசிரியர்களான ஒன்பதின் மரும் ஏறத்தாழ கி. பி. 9–ம் நூற்றுண்டு முதல் 11-ம் நூற் றுண்டு வரையுள்ள காலத்தில் வாழ்ந்தவர்களாகத் தெரி கின்றனர். திருமூலர் காலம் கி. மு. 6000-ம் என்பர். பதினெ ராந் திருமுறையை அருளிச் செய்த பன்னிரு ஆசிரியர்களும் கி. பி. 2-ம் நூற்றுண்டு முதல் பத்தாம் நூற்றுண்டு வரை யுள்ள காலத்தினர் என அறியப் படுகின்றனர். சேக்கிழார் பெருமான் பன்னிரண்டாம் நூற்றுண்டினராவர்.

/

## வகுத்தோர் காலம்:

முதல் இராஜராஜன் 9-ம் நூற்றுண்டின் இறுதியிலும் 10-ம் நூற்றுண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவன். இவன் அடியவர்கள் மூலம் சில தேவாரப் பாடல்களைக் கேட்டு அவற்றின் சிறப்பை உணர்ந்து அவை உயிர்கள் உய்திபெறச் சிறந்த சாதனமாகும் என்றெண்ணி முழுவதையும் தேடினன் நம்பியாண்டார் நம்பிகள் வாயிலாகத்திருநாரையூர்ப்பொல்லாப் பிள்ளையார் மூலம் சிதம்பரம் கனகசபையின் பின்பக்கத்தில் மூவர் திருக்கர அடையாளம் உள்ள அறையில் இருப்பதை அறிந்தான். கூத்தப் பெருமான் திருவருளால் தேவார ஏடு களைக் கண்டான். பலவற்றைச் செல்லரித்தமை கண்டு வருந் தினன். ''இக்காலத்திற்கு வேண்டுவன வைத்து மற்றவற்றை மறைத்தோம்'' என்ற அசரீரி வாக்கினுல் தெளிந்தான்,

நம்பியாண்டார் நம்பிகளைக் கொண்டு மூவர் அருளிய தேவாரப் பாடல்களை ஏழு திருமுறைகளாகவும், மாணிக்கவாசகர் அருளிய திருவாசகத்தையும், திருக்கோவையாரையும், எட்டாந்திருமுறையாகவும், ஒன்பதின்மர் அருளிய திருவிசைப்பாவையும், திருப்பல்லாண்டையும் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலர் அருளிய திருமந்திரத்தைப் பத்தாந் திருமுறையாகவும் பன்னிரு ஆசிரியர்கள் அருளிய நாற்பது பிரபந்தங்களையும் பதினொராந் திருமுறையாகவும் அமைத்தான். பன்னிரண்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவன் அநபாயன் என்னும் இரண்டாம் குலோத்துங்கன். அவனைப் புறச்சமய அபாயத்தினின்றும் நீக்குவதற்காகச் சேக்கிழார் பெருமானுல் அருளிச் செய்யப்பட்டதே திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம். இதன் பெருமையறிந்த அநபாயன் இதனைப் பன்னிரண்டாம் திருமுறையாக அமைக்கச் செய்தான்.

**ஓதுவார் உறுபயன் :**

உணவு உடம்பினை வளர்ப்பதுபோல் உயிரை (ஆன்மீக உணர்வை) இத் திருமுறைப் பாடல்கள் வளர்க்கவல்லன. அவை இம்மை மறுமை நலங்களை அளித்து வீடு பேற்றையும் அளிப்பன. ஆயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்த மக்கள் வாழ்க்கையையும். அவர்தம் மாண்பையும் உள்ளவாறு உணர்த்துவன. வேண்டுவார் வேண்டுவனவற்றை விரைந்து அளிப்பன. இடர் நீங்க வேண்டின் "மறையுடையாய்" என்ற பதிகத்தையும், விஷ ஜுரம் நீங்க வேண்டின் "அவ்வினைக் கிவ்வினையாம்" என்ற பதிகத்தையும், பொருள் வேண்டின் "இடரினும் தளரினும்" என்ற பதிகத்தையும். திருமணம் விரும்புவோர் "சடையாய் எனுமால்" என்ற பதிகத்தையும் விஷம் நீங்க வேண்டின் "ஒன்று கொலாமவர்" என்ற பதிகத்தையும், நெல் வேண்டுவோர் "நீள நினைந்தடியேன்" என்ற பதிகத்தையும், நாள்தோறும் பாராயணம் செய்து பயனடைவார்களாக. எல்லா நலங்களும் வேண்டுவோர் ஆண்டிற்கொரு முறை பன்னிரு திருமுறைகளையும் முழுவதும் நியதியாகப் பாராயணம் செய்வார்களாக. குழந்தைகளைத் திருமுறைப் பயிற்சியில் சேர்த்துச் சிறப்பெய்துவார்களாக.



[ 324-ம் பக்கத் தொடர்ச்சி ]

ஈடுபட்டு வேண்டினுல் இப்பொழுதுள்ள நாட்டின் குறைகள் அகன்று சுபிட்சமடையலாம் என்றும்

" பொருளற்றூர் பூப்பர் ஒருகால் அருளற்றூர்
அற்றூர் "

என்ற திருக்குறள் விளக்கம் சொல்லி ஆசி வழங்கினுர்கள்.

ஸ்ரீமத் சங்கராசாரியசுவாமிகள் ஒவ்வொருவரும் வீடுகளில் பிடிஅரிசிக் கலயங்கள் அமைத்து அதைச் சேர்த்து எடுத்துச் சென்று ஆலயத்தில் பெருமானுக்கு நிவேதித்து ஏழை எளியவர் களுக்குக் குறைந்த செலவில் உணவு கிடைக்கும்படி வழங்கச் செய்யவேண்டுமென்றும் நாமஜபம் பக்தி பஜனைகள் செய்தல் வேண்டுமென்றும் விளக்கிச்சொன்னுர்கள்.

குன்றக்குடி திருவண்ணுமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் மக்கள் தொண்டே மகேசன் தொண்டு என்பதை வலியுறுத்தினுர்கள். இதனை ஒட்டி மற்ற மடத்துத் தலைவர்களும் பக்தியின் மேன்மை தொண்டின் சிறப்புக்கள் குறித்துப் பலபட உபதேச மொழிகள் பகன்ருர்கள்.

தொடக்கத்தில் ஆணையரவர்கள் வரவேற்புரை மொழிந் தார்கள். முடிவில் சென்னை துணை ஆணையரவர்கள் நன்றியுரை பகன்ருர்கள். தொடக்கத்தில் திருமுறைப்பாடல் இசையரசு திரு. M. M. தண்டபாணி தேசிகர் அவர்களால் பாடப்பெற்றது,

இவ்விதமாக எல்லாவகையாலும் பொதுக்கூட்டம் சிறப்பாக முடிவுற்றது.

---

## ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி வாழ்த்து

அமுதமொழிக்கொண்டல்

### திருமுருக. கிருபானந்தவாரியார்

### நேரிசை வெண்பா

பெருமைமிகு சீர்சுப் பிரமணியப் பெம்மான்
தருமையா தீனத் தலைவன் — அருமைக்
கயிலைக் குருமணிதாள் கைதொழுவார் பாவ
வெயிலையடை யார்அடைவர் மெய்.

# சித்தாந்த வினாவிடை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான்.

திரு. சி. அருணைவடிவேலு முதலியார்

( மலர் 25, இதழ் 7, பக்கம் 281 இன் தொடர்ச்சி )

## உயிரின் இடைப்பட்ட நிலை

மாணாக்கன் : சார்ந்ததன் வண்ணமாதலே உயிரின் சிறப்பியல்பாயின், அதனை அறிவுடைப்பொருள் என்பதோ, அறிவில் பொருள் என்பதோ ? மற்றும் தோன்றியழியும் பொருள் என்பதோ, அவ்வாறின்றி என்றும் ஒரு பெற்றியாய் நிற்கும் பொருள் என்பதோ ? சூக்குமப் பொருள் என்பதோ, மேலான பொருள் என்பதோ, கீழான பொருள் என்பதோ ? இவற்றை அருளிச் செய்தல் வேண்டும்.

ஆசிரியர் : இவ்வாறு ஐயுற வேண்டுவதில்லை. ஏனெனில் சார்ந்ததன் வண்ணமாதலே உயிருக்குத் தன்னியல்பாதலின், அஃது, எல்லா வகையிலும் இடைப்பட்டதாய் நிற்கும் பொருளேயாயினமையின். அஃதாவது, உயிர் அறிவுடைப்பொருள், எனின், அதற்கு அறியாமை என்பது இருத்தல் கூடாது. அறிவில் பொருள் எனின். அறிவித்தாலும் அறிதல் கூடாது. ஆகவே, அறிவுடையதாயினும், அவ்வறிவு அறியாமையால் கவரப்படும் தன்மையுடையதாய், ஒருகால் அறியாமையாய் நிற்றலையும் உடையது என்பது பெறப்படும். படவே, 'உயிர் அறிவுடைப் பொருளோ, அறிவில் பொருளோ ?' என வினவுவார்க்கு, 'இரண்டும் அல்ல ; இரண்டுந்தான்' என்பதே விடை. அஃதாவது, அறியாமையோடு கூடி அறியாமையாய் நிற்பினும், அறிவிக்க அறிந்து வருவதால் அவ்வறியாமையின் நீங்கி அறிவுடைப்பொருளோடு கூடி அறிவேயாய் நிற்கும் என்பதாம். அறிவுடைப் பொருள், 'சித்து' என்றும் அறிவில்பொருள் 'அசித்து' என்றும் சொல்லப்படுவதால், உயிர், அவ்விரண்டிற்கும் இடைப்பட்ட, 'சிதசித்து' எனப்படும். பதி, சித்து; பாசம், அசித்து;பசு, சிதசித்து என்பதும் விளங்கும்.

இவ்வாறே, 'உயிர் தோன்றியழியும் பொருளோ, அவ்வாறின்றி என்றும் ஒரு பெற்றியாய் நிற்கும் பொருளோ ? என

வினவுவார்க்கும், மேல் நீ வினவியவாறு மற்றும் பலவாறு வினவுவார்க்கும், 'இடைப்பட்ட நிலையில் நிற்பது' என்பதே விடையாகும். அவையாவன, 'உயிர், தான் தோன்றிநின்று அழிவதில்லையாயினும், தோன்றிநின்று அழியும் பொருளில் ஒன்றிநின்று, அதுவழியாகவே தனது அறிவும், அனுபவமும் நிகழநிற்றலின், தோற்றம் நிலை இறுதிகளையுடையதாய் நிற்கும். என்றும் ஒரு பெற்றியாய் நிற்கும் பொருள் 'சத்து' என்றும், தோன்றியழியும் பொருள், 'அசத்து' என்றும் சொல்லப்படுவதால், உயிர் அவ்விரண்டிற்கும் இடைப்பட்ட, 'சதசத்து' என்று சொல்லப்படும். பதி, சத்து ; பாசம், அசத்து ; பசு, சதசத்து.

இன்னும், பதி சூக்குமப் பொருள் ; பாசம் தூலப்பொருள்; பசு இவ்விரண்டுமல்லாத சூக்குமாசூக்குமப் பொருள் எனவும், பதி மேலான பொருள் ; பாசம் கீழான பொருள்; பசு இடைநிலையான பொருள் எனவும் கூறுதல் வேண்டும்.

மாணுக்கன் : பசு சிதசித்து எனின், 'சித்துத் தன்மை, அசித்துத்தன்மை' என்ற இரண்டு தன்மையும் உடையது என்பதுதானே பொருள் ? மாறுபட்ட இருதன்மை ஒரு பொருளின் இருத்தல் இல்லையாதலின், 'ஆன்மா சிதசித்து' என்றல் பொருந்துமாறு இல்லை ; ஆதலின், அதனை, சித்தென்றுயினும், சடம் என்றுயினும் கொள்ளுதலே; பொருந்துவது போலும் !

ஆசிரியர் : ஆன்மா சித்துப் பொருளாயின், பொருள்களை அறிதற்குக் கருவி கரணங்களைத் துணைக்கொள்ள வேண்டுவதில்லை ; இவற்றைத் துணைக்கொள்ளாமலே அறிதல் வேண்டும்; அஃதாவது, கண்ணில்லாமலே காணுதல் வேண்டும் ; காது இல்லாமலே கேட்டல் வேண்டும் ; மற்றும் பலவற்றையும் இவ்வாறு தானே தனித்து நின்று செய்தல் வேண்டும் இவற்றைத் துணைக்கொண்டு அறிவதுதான் அதற்கு இயல்பெனின் ஆன்மா எக்காலத்திலும் இவற்றினின்றும் நீங்குதல் இன்றி இவற்றோடு கூடியே நிற்கவேண்டும். அவ்வாறு நிற்பது, பிறப்பு நிலையாகிய பந்தமேயன்றி வீடன்று; ஆதலின், உயிர்க்கு வீடு என்பதே இல்லையாகிவிடும். அதனால், உயிரை, 'சித்து' என்றல் பொருந்தாது. கருவி கரணங்கள் இன்றித் தானே அறிகின்ற பரம்பொருளே சித்து. சித்து என்றும் சித்தேயாதலின், உயிரை, சித்தாகிய பரம்பொருளின் பரிணமமாகக் கூறுதலும் பொருந்துமாறில்லை.

மாணாக்கன் : அங்ஙனமாயின், 'உயிர் அசித்து (சடம்); அது கருவி கரணங்களோடு கூடிச்சித்தாய் நிற்கும்' என்போம்.

ஆசிரியர் : ஒருசாரார் (வைசேடிகர்) அங்ஙனமே கூறு கின்றனர்; அதுவும் பொருந்துமாறில்லை. ஏனெனில், சித்துச் சடமாகாததுபோல, சடமும் சித்தாகாதன்றோ ?

மாணாக்கன் : 'உயிர், சித்தும் அன்று : அசித்தும்அன்று' எனின், மற்று யாது ?

ஆசிரியர் : 'சிதசித்து' என்று முன்பே கூறினோம்.

மாணாக்கன் : இரண்டு மறுதலைத் தன்மைகள் ஒரு பொருளிலே இருத்தல் இயலாது என்பதை அடியேன் முன்னமே நினைவுபடுத்தினேன்.

ஆசிரியர் : அஃது உண்மையே; ஆயினும், 'சிதசித்து' என்பதற்கு, 'சித்துத் தன்மை; அசித்துத் தன்மை' என்ற இரு தன்மையும் உடையது என்பது பொருளன்று; இரண்டிற்கும் இடைப்பட்ட மற்றொரு தன்மை என்பதே பொருள். அஃதாவது, சித்துப் பொருளை நோக்க 'அசித்து' என்னும்படியும், அசித்துப் பொருளை நோக்க 'சித்து' என்னும்படியும் நின்று, சித்தோடுகூடிச் சித்தாயும், அசித்தோடு கூடி அசித்தாயும் நிற்பதாய ஒருதன்மை என்பதே பொருளாம். ஏனையவற்றிற்கும் இவ்வாறே பொருள் கொள்ளுதல் வேண்டும்.

அவையாவன : 'உயிர் சதசத்து' என்பதற்கு, சத்தும் அன்றாய், அசத்தும் அன்றாய், சத்தை நோக்க அசத்தாயும், அசத்தை நோக்கச் சத்தாயும் நின்று, சத்தோடு கூடிச் சத்தாயும், அசத்தோடு கூடி அசத்தாயும் நிற்பதொரு தன்மை என்பதே பொருள்.

'உயிர் சூக்குமாசூக்குமப் பொருள்' என்பதும் இவ்வாறே யாம். இதனானே, உயிரை, 'அருவப் பொருள்' என்றோ, 'உருவப் பொருள்' என்றோ, 'இரு தன்மைகளையும் உடைய பொருள்' என்றோ கூறுதல் பொருந்தாது.

'உயிர் ஆகாயம் போன்ற அருவப் பொருள்' என்பது பாதஞ்சலர் மதம். உயிர் அருவமாயின், உருவமாகிய உடம்பை எவ்வாறு செயற்படுத்தும் ?

'உயிர் உருவப் பொருளே' என்பது பௌராணிக மதம். உருவம் என்பது காட்சிக்குப் புலனாகும் பொருளேயன்றோ? அதனால், உயிரை உருவப்பொருள் என்றால், 'உடம்பே உயிர்' என்பதுதான் கருத்தாகிவிடும்.

'விறகு, உருவமாய்க் காணப்பட்டும், நெருப்பு அருவமாய்க் காணப்படாதும் நிற்றல்போல, ஆன்மா உருவம், அருவம் இரு தன்மைகளையும் உடையது என்பர் ஒருசாரார் (கௌளர்)' விறகும், நெருப்பும் வேறு வேறு பொருள்கள்; அவற்றை ஒரு பொருளுக்கு எடுத்துக்காட்டாகக் கூறுதல் பொருந்தாது. இனி, சந்திரன்போல அருவுருவம் என்னில், உயிரும் சந்திரன்போல சிலபொழுதாயினும் காணப்படல் வேண்டும்; எனவே, மாறுபட்ட இருதன்மை ஒருபொருளுக்குக் கூடாமையால், உயிரை அருவுருவம் என்றலும் பொருந்தாது. இங்ஙனமே உயிரின் தன்மை எல்லாவற்றையும் தனியாக வைத்துணர்தல் வேண்டும். ஆகவே, பதி, சத்து; சித்து; சூக்குமம். பாசம் அசத்து; அசித்து; தூலம். பசு பதியை நோக்க. 'அசத்து, அசித்து, தூலம்' எனவும், பாசத்தை நோக்க, 'சத்து, சித்து, சூக்குமம்' எனவும் சொல்லத்தக்க ஒரு தனித் தன்மையை உடையது என்பதாயிற்று. 'பசு, சதசத்து; சிதசித்து; சூக்குமாசூக்குமம்' என்பதற்கு இதுவே பொருளாதலை அறிந்துகொள்க.

( தொடரும் )

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Panchanathiswaraswami Devasthanam, Tiruvaiyaru

The temple is maintained very clean under the able guidance of His Holiness Dharmapuram Adhinam. I am fortunate to pay respects to the God at this time. The temple staff are very cordial and extremely helpful.

(Sd.) V. A. D Rayalu,
Asst. Planning Officer.
All India Radio, New Delhi.

28-5-66.

# தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி

# 65–66 ஆம் ஆண்டின் மாணவர் தேர்ச்சி நிலை

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களால் 2—8—1946 இல் தொடங்கி வைக்கப்பெற்றது இப் பல்கலைக் கல்லூரி. மாயூரம் மகாதான வீதியில் மிகச் சிறந்த கட்டிடத்தில் இக் கல்லூரி நடைபெற்றுவருகிறது. இருபதாண்டுகளில் இருநூற்றுநாற்பத்தைந்து வித்துவான்கள் இக் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்றுத் தமிழகத்தின் பல பகுதிகளிலும் பணி செய்கின்றனர். சென்னைமாநிலத்திலேயே முதல்வராகத் தேறித் திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடத்தினர் நிறுவியுள்ள ஐந்தாம்ஜார்ஜ் மன்னர் நினைவுத் தமிழ்ப் பரிசு பெற்றோர் நால்வர்.

சென்னைப் பல்கலைக் கழகத்தோடு இணைந்த இக் கல்லூரியில் வித்துவான் தேர்வுக்குரிய பாடப் பகுதிகளோடு சமய நூற் பயிற்சியும் பெற்றுவருகின்றனர்.

மாணவர்கள் நுண்ணறிவு பெறுதற்குத் தனியே நூலகம் நிறுவப்பெற்றுள்ளது. பேச்சுப் பயிற்சி பெறுதற்கு ஸ்ரீ குரு ஞானசம்பந்தர் மாணவர் கழகம் என்ற சொற்பயிற்சிக் கழகம் அமைக்கப்பெற்றுள்ளது.

மாணவர்கள் பாடப் பகுதிகளிலும் சமயநூற் கல்வியிலும் ஊக்கம் காட்டிப் பயிலுதற்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களால் அவ்வப்போது பரிசுகள் வழங்கப் பெற்று வருகின்றன.

பழைய மாணவர்களைத் தொடர்பு படுத்தும் வகையில் ஸ்ரீ வெள்ளியம்பலவாணர் பழைய மாணவர் கழகம் அமைக்கப் பெற்றுள்ளது.

தருமையாதீனத் திருமடத்தில் நிகழும் சிறப்பு நிகழ்ச்சி களில் கலந்துகொள்ளும் வாய்ப்பும், ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானம் அவர்களைத் தரிசித்து அவர்கள் அருளுரை கேட்கும் வாய்ப்பும் மாணவர்களுக்குக் கிடைக்கும் நல்வாய்ப்பு.

இக்கல்லூரியின் சென்ற ஆண்டின் தேர்ச்சி நிலை 1965-66 வித்துவான் நிறைநிலை.

தேர்வு எழுதியவர் 13.

| | | |
|---|---|---|
| முதல்தகுதி | ... | 1 |
| இரண்டாந்தகுதி | ... | 7 |
| மூன்றுந்தகுதி | ... | 5 |
| | | 13 |

வித்துவான் முதனிலை. தேர்வு எழுதியவர் 38.

| | | |
|---|---|---|
| முதல்தகுதி | ... | 1 |
| இரண்டாந்தகுதி | ... | 10 |
| மூன்றுந்தகுதி | ... | 26 |
| | | 37 |

இப் பல்கலைக் கல்லூரியைத் தோற்றுவித்துப் போற்றிப் புரந்துவரும் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் பொன்னார் திருவடிகளுக்குப் பேராசிரியர்கள் மாணவர்கள் அனைவரும் நன்றியுணர்வோடு கூடிய வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்கின்றோம்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

Sri Vaidhianathaswamy Devasthanam, Vaithiswarankoil

எங்கள் குடும்பமே இன்று தீராதநோய் தீர்த்தருள வல்லான் தன்னை, திரிபுரமும் தீயெழத்திண் சிலைகைக் கொண்டானை வணங்கி அருள்பெற்றுக் கட்டளைத்தம்பிரானையும் கண்டு வணங்கும் வாய்ப்பினைப்பெற்றோம் கோயில் திருப்பணியில் தீவிரமாக ஈடுபாடுள்ள சிப்பந்திகள் அனைவரின் அன்பும் அடக்கமும் அவரை அமரருள் உய்விக்கும். கோயிலின் உயர்ந்தமுறைப் பாதுகாப்பும் பேணிப்பும் மனநிறைவும் பெருமையும் கொள்ளச் செய்கின்றது.

ஆண்டவன் அருள் என்றும் எங்கும் பரவுக.

(Sd.) Vasudevan,
Collector,
South Arcot

19—6—66.

# செய்திகள்

## சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலையச் சார்பில்

### மாதாந்தர வழிபாடு

சென்னை, தருமை ஆதீன சமயப்பிரசார நிலைய மாதாந்திர வழிபாடு 22—5—66 ஞாயிறு மாலை சைதாப்பேட்டை ஸ்ரீகாத ணீசர் ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டுக் குழுவினர் சார்பில் சுவாமி அம்பாளுக்கு அபிஷேக ஆராதனைகள் நிகழ்த்தப்பட்டன. சந்நிதிகளில் தேவாரத் திருமுறைகள் ஓதி முறையாக வழிபாடு செய்யப்பெற்ற பிறகு ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில் திரு. நல். முருகேச முதலியார் திருமதி வித்துவான், மீனாட்சிசுந்தரசிவை இருவரும் சமயச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அறங்காவலர் திரு. சம்பந்த சம்பந்த முதலியார் குழுவினரை வரவேற்று வழிபாட்டையும், சமயப் பிரசாரத்தையும் உடனிருந்து நடத்திவைத்தார்கள்.

### ஸ்ரீ சேக்கிழார் சுவாமிகள் குருபூசைவிழா

நிலையத்தில் 23—5—66 ஸ்ரீ சேக்கிழார்சுவாமிகள் குருபூசை விழா சென்னை மாநில அறநிலையத்துறை ஆணையர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் தலைமையில் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. "பாக்கியலக்ஷ்மி" ஆசிரியர் திரு. K. C. தியாகராஜன் குழுவினர் "சேக்கிழார்" வரலாறு பற்றி கதாகாலட்சேபம் சிறப்புற நிகழ்த்தினர். ஆணையர் தமது தலைமையுரையில் பெரியபுராணம் தலைசிறந்த உலக இலக்கியங் களுள் ஒன்று என்றும் தேசிய இலக்கியமாகத் திகழ்வது என்றும் குறிப்பிட்டார்கள், 20—5—66ல் நடைபெற்ற வேலூர்க் கிருத்திகை அபிஷேக அர்ச்சனைப் பிரசாதங்கள் வேலூர்த் தேவாரப் பிரார்த்தனை நிகழ்த்தி விழாவிற்கு வந்த எல்லோருக் கும் விநியோகிக்கப்பட்டன. ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியுரையும் கூறினார்கள், திரு. P. சுவாமிநாதன் தேவாரப்பிரார்த்தனை நிகழ்த்தினார்.

## வேளூர் மண்டலாபிஷேகக் கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா

16—6—66ல் வேளூரில் நடைபெற்ற மண்டலாபிஷேகக் கிருத்திகைப் பிரசாதம் 17—6—66 மாலை 7-மணிக்கு நிலைய மன்றத்தில் சென்னை மாகாணப் பிரதம மாஜிஸ்ட்ரேட் திரு. V. பலராமையா பி. ஏ., பி. எல்., அவர்கள் தலைமையில் வேளூர்த் தேவாரம், திருப்புகழ், பிள்ளைத்தமிழ்ப் பிரார்த்தனை நிகழ்த்தி நிலைய அன்பர்கட்கும், பொதுமக்கட்கும் வழங்கப்பட்டன. திரு P சுவாமிநாதன் பிரார்த்தனை நிகழ்த்தினர். ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியுரையும் நவின்றார்கள்.

## மாணிக்கவாசகர் குருபூசைவிழா

நிலையத்தில் 23–6—66. மாலை ஸ்ரீ மாணிக்கவாசகர் குருபூசை விழா திரு. G. M. முத்துசாமி பிள்ளை பி. ஏ., அவர்கள் தலைமையில் கொண்டாடப்பெற்றது. சங்கீதபூஷணம், திரு. V. S. ஞானஸ்கந்தன் கடவுள் வணக்கம்பாடினர். திரு. K. S. இராமகிருஷ்ண சாஸ்திரிகள் "மாணிக்கவாசகர்" பற்றி விரிவுரை நிகழ்த்தினார்கள். சென்னை வானொலி நிலைய இசைத் துறைத் தலைவர் திரு. K. C. திருவாசகப் பாடல்கள் சிலவற்றை இசையுடன் உருக்கமாகப் பாடினர். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியுரையும் கூறும்போது இறைவனால் எழுதப்பட்ட பெருமை வேறு எந்த நூலுக்கும் இல்லை. திருவாசகம் ஒன்றற்கு மட்டும் அந்தப்பெருமை உண்டு என்றார்கள்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Sattanathaswami Devasthanam, Shiyali.

"We visited the great temple and we were greatly impressed by the maintenance. At all places one comes across the benevolence of the Adheenam."

(Sd.) T. D. Sunderraj,
Dist. Rev. Officer, Cuddalore.

5—6—66

# எதிர்காலம் - திரு. கே. முத்துஜோதிடர்

( பராபவஞு ஆடிமீ 1 முதல் 31வ முடிய )
( 17—7—66 முதல் 16—8—66 முடிய )

நாளது வருஷம் ஆடிமாதம் தக்ஷிணாயன புண்ணியகாலத்தன்று, மிதுனராசி அந்தத்திலும், கடகராசி ஆதியிலும் மாச சந்தியில் சூரியன்; சந்திரன; செவ்வாய்; புதன்; குரு; சுக்கிரன் இந்த ஆறு (6) கிரஹங்களும் சேருகிறபடியால் இயற்கையாக அவாகள் கொடுக்கக்கூடிய பலன்களைச் சற்று மாறுதலாகவும் முன்பின்னாகவும் உலகத்திற்கும் மகாஜனங்களுக்கும் கொடுப்பார்கள். ஆதலால் மிதுனராசி, கடகராசி, விருச்சிகராசிகளில் ஜனித்தவர்கள் முக்கியமாக அவரவர்களுடைய சௌகரியத்துக்குத் தக்கபடி ஸ்ரீ நவக்கிரகங்களின் வழிபாடு நடத்திக்கொள்வது உத்தமம. மற்றவர்களுக்கும்கூட தன் குடும்பத்திற்கும் உலக க்ஷேமத்திற்கும் ஸ்ரீ நவக்கிரகங்களின் வழிபாடுகள் சுப பலனைத் தரும.

**1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை ¼**

மேஷராசி 9 பாதங்களும் சுபபலனைத் தரும்; தூரயாத்திரையும், இடம் மாறுதலும், இல்லற சுகமும் உண்டுபண்ணும். வித்யாவிருத்தியாகும. தொழில் ஓங்கும்; வெகுகாலமாய் பிரிந்துபோன உறவினர்கள் வந்து சேருவார்கள். செவ்வாய், புதன் சுபமாகும.

**2. ரிஷபம. கார்த்திகை ¾ - ரோஹிணி - மிருகசீரிஷம் ½**

விருஷபராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். அடிக்கடி மனக்கவலையை உணடுபண்ணும்; எல்லாக் காரியங்களும் தவக்கத்தோடு முடியும். வரவுககு மிஞ்சின செலவுகள் ஏற்படச்செய்யும. சனி, வியாழன் சுபமாகும்.

**3. மிதுனம். மிருகசீரிஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾**

மிதுனராசி 9 பாதங்களும், மிதநியான சிரம பலனை உண்டுபண்ணும் ரோகவிருத்தியாகும். வியவசாயத்தாலும, வியாபாரத்தாலும் நஷ்டம் உண்டுபண்ணும. பெரியோர் நல்லோர்களுடைய மனஸ்தாபமும் உண்டாகும். தன் இஷ்டப்படி நினைத்த காரியம் நடக்காமல் தடுக்கும். புதன், வியாழன் சுபமாகும்.

**4. கடகம். புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.**

கடகராசி 9 பாதங்களும் மிச்ரபலனைத்தரும். ஆரம்பத்தில் ராஜாங்கத்தால் நன்மை உண்டுபண்ணும், சில்லரையான நஷ்டங்கள் அடிக்கடி உண்டாகும். சத்ருக்கள் ஓடிவிடுவார்கள். ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் விருத்தியடையும். விவசாயமும், வியாபாரமும் ஓங்கும். குடும்பத்தினருக்கு அடிக்கடி வியாதிபீடையை உண்டுபண்ணும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் ¼**

சிம்மராசி 9 பாதங்களும் சுபமேயாகும். உத்தியோக உயர்வு கிடைக்கும். ஆரோக்கியம் உண்டுபண்ணும். அடிக்கடி பந்துமித்ராளுடைய சேர்க்கை உண்டுபண்ணும். ஸ்திர சுகவாசம் உண்டுபண்ணும். வித்யாவிருத்தியாகும். சனி, செவ்வாய் சுபமாகும்.

**6 கன்னி. உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½**

உத்திரம் 2, 3, 4 பாதங்களும், சித்திரை 1, 2 பாதங்களும் பூர்ண சுபபலனைத்தரும். தொழில் விருத்தியாகும். உத்தியோக உயர்வு ஏற்படும். சுகவாசத்தோடு இடம்மாறுதல் ஏற்பட்டு இல்லறசுகம் உண்டுபண்ணும். தெய்வபலம் முன்னிற்கும். அஸ்த நக்ஷத்திரம் நான்கு பாதங்களும் மிச்ரமான பலனைத்தரும். வரவுக்கு மிஞ்சின செலவினங்களை உண்டுபண்ணும். அடிக்கடி மனதிற்கு சஞ்சலம் உண்டுபண்ணும், சற்று ஆரோக்யக்குறைவும் காட்டும். ஆனாலும், மாதம் பாதிக்குமேல் எல்லாவித சௌகரியங்களும் தானாக ஏற்படும். விவசாயம் ஓங்கும். நஷ்டமான பொருள்கள் தானாக வந்து சேரும். தெய்வபலம் முன்னின்று காக்கும். உலக பிரசித்தியைத் தரும். வித்தியாவிருத்தி ஏற்படும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**7. துலாம். சித்திரை ½, - சுவாதி - விசாகம் ¾.**

சித்திரை 3, 4 பாதங்கள் சுபமிராது. வீண் அலைச்சல்களும், ரோகபீடையும் உண்டுபண்ணும். சுவாதி நான்கு பாதங்களும் விசாகம் 1, 2, 3 பாதங்களும் சுபமேயாகும். ஜீவனம் ஓங்கும் ஆரோக்கியம் உண்டுபண்ணும். மேலோர் பெரியோர்களுடைய சார்பினால் சகல காரியமும் சாத்தியமாகும். தெய்வபலம் முன்னிற்கும். வெள்ளி, சனி சுபமாகும்.

8. விருச்சிகம். விசாகம் ¼ அனுஷம்-கேட்டை

விருச்சிகராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். வரவு செலவு சமனாகும். வியவசாயங்கள் இருஷிவாணிஜ்யத்தால் கவலையை உண்டுபண்ணும். மாதம் பாதிக்குமேல் ஆடி மாதம் 15 ஆம் தேதிக்குமேல் சுபமாகும். சனி, ஞாயிறு சுபமாகும்.

9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் ¼

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்ரபலனைத் தரும். எதிர்பாராத செலவுகளும் நஷ்டங்களும் உண்டுபண்ணும். சகல காரியங்களும் தவக்கப்படும். புத்திராதிகளால் சுபமும் லாபகரமும் உண்டாகும். மனம் ஒருவாறு சந்தோஷம் அடையும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

10. மகரம். உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

மகரராசி 9 பாதங்களும் சுபத்தையேதரும். நூதன உத்தியோக லாபமும் இடம் மாறுதலோடு லாபகரமும் உண்டு பண்ணும். வெகுகாலமாய் நடவாத காரியம் சுலபமாய் நடக்கும். தெய்வபலம் காக்கும். சனி, ஞாயிறு சுபமாகும்.

11. கும்பம் - அவிட்டம் ½ சதயம் - பூரட்டாதி ¾.

கும்பராசி 9 பாதங்களும் மிச்ரமான பலனைத் தரும். சிற்சில தொழில் மாறுதல்களும் குடும்பக் கலகமும் வீண் செலவுகளும், அனாவசியமான தொல்லைகளும், நஷ்டங்களும் உண்டுபண்ணும். மாதக் கடைசியில் எதிர்பாராத நன்மைகள் உண்டாகும். சத்ருக்கள் சரண் அடைவார்கள். புதன், வியாழன் சுபமாகும்.

12. மீனம் பூரட்டாதி ¼ உத்திரட்டாதி - ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் சுபமேயாகும். உத்தியோக உயர்வும் குடும்ப சுகமும், தனதான்ய சமிருத்தியும், உலகப் பிரசித்தியையும் தரும். தேவதாகுரு பக்தியும் உண்டுபண்ணும். இல்லறம் ஓங்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

குறிப்பு :— உலக விஷயத்தைப்பற்றி முன்பே எழுதப்பட்டு இருக்கிறது. கூடக் கிரகங்களின் காரணத்தால் உலகில் நடக்கவேண்டிய இருஷிவாணிஜ்யம் பொருளாதாரம் இவைகளில் சிரமத்தைக்காட்டும். தெய்வபலம் உள்ள இடங்கள் காப்பாற்றப்படும். மகாஜனங்கள் மேலோர் முதல் கீழ்வரையில் அவரவர்கள் தன்னுடைய கடமைகளை சரிவர செய்துகொண்டு, கோபதாபம் மதமாத்சர்யம் இல்லாமலும் அன்புடனும் எல்லோரும் இருந்துகொண்டு கடவுளை வழிபட்டுக்கொண்டுவர கடவுள் காப்பார். சுபம் உண்டாகும். சுபமஸ்து.